



# 50,000 ரூபாய் மதிப்புள்ள பரிசுகள் பெறுங்கள்

## பாரியின் 'ஏற்றதருணம் எது' போட்டியில் சேருங்கள்

**2** முதற் பரிசுகள் — ரு 10,000 மதிப்புள்ள நகைகள், உங்கள் விருப்பம் போல்

**2** இரண்டாவது பரிசுகள் — ரு 5,000 மதிப்புள்ள நவீன குக்கிங் ரேஞ்ச் அல்லது ரேப்ரிஜிரேட்டர்

50 ஆறுதல் பரிசுகள் — ரு 400 மதிப்புள்ள காஞ்சீபுரம் பட்டுச்சேலைகள்





முழு விவரங் களடங்கிய நுழைவுத்தாட் கள் உங்கள் அருகாமை யிலுள்ள பாரி விற்பனை யாளரிடம் பெறுங்கள்.

பாரியின் 'ஸ்வீட் பாங்க்'
தரமான பாரி மிட்டாய்கள் அடங்கியது.
கண்ணைக் கவரும் ஆறு அழகிய
வண்ணங்களில். 450 கிராம்
மிட்டாய்களுக்கு
விலை ரூ 12 தான்!

**முந்துங்கள்! போட்டி முடியும் நாள் ஜீன் 15, 1975**



பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை

SAA/PRS/1665

# உங்கள் குழந்தையை இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?




வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிருபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வையை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது. ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கத் தாய்மார்கள் நம்பும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்*
## ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது, அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson*



OBM-4316 TM

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவனுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும்.. நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசிய மான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.

அடடே!
என்ன வளர்ச்சி!
உண்டு வளர்வான்
கண்டு மகிழ்வீர்!



## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்: 14 வயது வரையில்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
## உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு
*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

# புதிய அனுபவம், பேரானந்தம்



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



செஞ்சுரி -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின், அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025.

ADROIT/925

# ஓரியண்ட்






டெஸ்க் மின்விசிறி



சூப்பர் டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஸ்டாண்ட் மின்விசிறி

## வலிமை மிக்கது
## ஓசையற்றது
## நம்பிக்கை வாய்ந்தது

ஓரியண்ட் மின்விசிறிகள் நவீன மோஸ்தரில் கட்டப்பட்டுள்ள வீடுகள், ஆபீஸ்கள் மற்றும் அலுவலகங்களின் எழிலுக்கு ஏற்றவாறு இணைந்து பரிமளிக்கும் வகையில் அற்புதமாக உருவாக்கப்பட்டுள்ளன. உங்களுடைய குறிப்பிட்ட தேவைகளுக்கு தகுந்தவாறு பற்பல விதங்களில் கிடைக்கின்றன—ஸீலிங், டேபிள், டெஸ்க், ஸ்டாண்ட், ஆல் பர்ப்பஸ் மற்றும் எக்ஸ்ஹாஸ்ட் மாடல்கள்.

இந்தியாவின் மிகச் சிறந்த அனுபவமிக்க மின் விசிறி தயாரிப்பாளர்களால் தேர்ந்து அளிக்கப்படும் எல்லாவிதமான ஓரியண்ட் மின் விசிறிகளும் அவற்றின் ஈடிணையற்ற சிறப்புத் தன்மைகளுக்கு இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் பெயர் பெற்றவை.

எல்லா மின்விசிறிகளும் இரண்டு வருட உத்தரவாதம் உள்ளவை.

**மிக அதிக அளவில் விற்பனையாகும் பெருமை மிக்க தினுசுகள்.**



டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஆல் பர்ப்பஸ் மின்விசிறி

## ஓரியண்ட்
## விசிறி

உலக முழுவதும் தேர்ந்தெடுக்கப்படுபவை



**ஓரியண்ட்** ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், 6, கோர் பீபி லேன், கல்கத்தா-54

தொழிற்சாலைகள் : கல்கத்தா, பரிதாபாத்

CC-O-4/73

ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும்
ஏற்படும்போது வெட்கப்படுங்கள்...
அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்..,ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவர்-இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது...வாரக்கணக்கில் பட்டுப் போல் மென்மை—தொட்டுப் பார்த்தால் மழமழப்பு...பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



## ஆன் பிரெஞ்ச்

### ஹேர் ரிமூவர்

அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffery Manners &Co. Ltd.

126 HR-182 Tam

## நாங்கள் காட்டும் அத்தாட்சி இதோ:




## இதோ நீங்கள் காட்டும் அத்தாட்சி:




# ஸிக்னல் ஃப்ளூரைடு ஒன்றுதான் பற்சிதைவையும் வாய் நாற்றத்தையும் தடுத்துநிறுத்திக் காட்டுகிறது

## ஒப்பற்ற பல்சுத்திகரிப்பு மூலப் பொருளின் அடிப்படையிலே.

**பற்சிதைவை நிறுத்துகிறது ஸிக்னலில் உள்ள ஃப்ளூரைடு**

ஜெர்மனியிலே பல்டாக்டர்கள் கின்க்கல், ஸ்டோல்டே...400 குழந்தைகளைக் கொண்டு பரிசோதனைகள் நடத்தி நிரூபித்தனர்: பற்சிதைவை 33 சத விகிதம் குறைத்தது ஸிக்னல் ஃப்ளூரைடு (ஆதாரம்: DAS DEUTSCHE ZAHNARZTEBLATT, 1968, 9, 445-460). எப்படி நிரூபித்தது ஸிக்னலின் ஃப்ளூரைடு? பல்லெனாமலோடு அது ஒருங்கிணைகிறது: பற்கள் அரித்துப் போகவும், முடிவில் சிதைவுபடவும் முக்கிய காரணமான அமிலத் தாக்குதலை வலுவாக எதிர்த்து நிற்கிறது. ஸிக்னல் தேய்க்கும் சிறுவர்கள் பல்வலி என்றால் இன்னதென்றே அறியார். உங்கள் குடும்பத்தினருக்கும் இதுவன்றோ நற்காப்பு: ஸிக்னல் சிகிச்சையே முற்காப்பு.

**வாய்நாற்றத்தை நிறுத்துகிறது ஸிக்னல் உள்ள எஸ்-14**

அமெரிக்காவிலே டாக்டர் ஹாவர்டு E. விண்டு... மருத்துவப் பரிசோதனைகள் நடத்தி நிரூபித்தார்: துலக்கிய 15 நிமிடங்களில் வாய்நாற்றக் கிருமிகளிலே 95 சத விகிதத்தை ஒழித்துக் கட்டியது ஸிக்னலின் எஸ்-14. 10 மணி நேரம் ஆனபின்னரும் வாய்நாற்றம் 75 சத விகிதம் குறைந்திருந்தது (ஆதாரம்: U.S.A., நார்த் வெஸ்டர்ன் யூனிவர்ஸிட்டி அறிக்கை 23 அக் 1968)

**ஸிக்னலுக்கே உரிய சுத்திகரிப்பு மூலப் பொருளால் பற்களுக்கு மருத்துவப் பரிசுத்தம்**

ஸிக்னலின் ஒப்பிலா மூலப் பொருளான அலுமினியம் ட்ரைஹைட்ரேட், பல் டாக்டரே துலக்கித் தந்தது போல் தூய்மை அளிக்கிறது, பல் எனாமலைப் பாதிக்காமலே (ஆதாரம்: ரிஸர்ச் ரிவியு 7 வது 1969, வெஸ்டிடேஸ் U.R. லேபாரட்டரீஸ், ஐல்வொர்த், U.K.). ஒப்பில்லாச் சுத்திகரிப்பு மூலப் பொருளிலே ஃப்ளூரைடு, எஸ்-14--இம் மும் மணிகளும் இணையுமிடம்: ஸிக்னல் ஒன்றுதான். இன்றொரு பற்பசை இவ்வளவு செய்யாது.




## அத்தாட்சி காட்டுவது

## ஸிக்னல் ஃப்ளூரைடு ஒன்றே—
## கேளுங்களேன் பல் டாக்டரை.

லின்டாஸ்-SGF 63-140 TM

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# கல்கி

ஆனந்த வைகாசி 11
மே 25, 1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.





## For the first time in the world

# A fairness cream that works without bleaching

Never before in the world has there been a product that has been able to effect fairness without bleaching. Till now, trying to make the skin fairer has always been a chancy business. Using a bleach to lighten the skin is known to be harmful, particularly if used frequently, owing to its harsh characteristics.

**Fair & Lovely is a scientific breakthrough that works two ways**

**1. It has a vitamin that works from the inside**




The vitamin enters the skin as you apply the cream. You can feel it working as you smooth it in . . . gently reversing the spreading of skin-darkening. With regular application through a period of six weeks you will notice the difference. And so will others.

**2. It has sun screen agents to protect from outside**

Fair & Lovely protects the skin by filtering out those sun rays that cause skin darkening.

**Fair & Lovely a fairness cream . . . and more**

Use it as a vanishing cream under make-up, at least once a day, twice for best results. Regular use of Fair & Lovely will ensure that you keep your complexion as fair as you want it to be.

## *Fair & Lovely* – the gentle way to a fairer skin

A Quality product of Hindustan Lever

LINTAS.FALOV.6-140

# புரியவில்லை எனில் திரிப்பானேன்?

மக்கள் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்கள் ராஜாஜியின் கல்வித் திட்டத்தை மீண்டும் அமுல் நடத்தும்படி தமிழக முதல்வருக்கு யோசனை சொன்னதைத் தமிழக மக்கள் உவகையோடு வரவேற்பார்கள்.

ஆனால் முதல்வரோ, பத்திரிகை நிருபர்களிடம், ராஜாஜியின் திட்டத்தை, ஜெ. பி. சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ராஜாஜி, திருவான்மியூரில் சலவைத் தொழிலாளிகள் கூட்டத்தில் பேசிய போது, 'வண்ணான் மகன் வண்ணானாகவே இருக்க வேண்டும்; கன்னான் மகன் கன்னானாகவே இருக்க வேண்டும்' என்று கூறினார் எனச் சொல்லி யிருக்கிறார்.

இதற்கு ஜெ. பி. அன்றே வக்கீல்கள் எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் கூட்டத்தில் பேசிய போது, ''ராஜாஜி ஒரு நாளும் வண்ணான் மகன் வண்ணானாகத்தான் வர வேண்டும், கன்னான் மகன் கன்னானாகத்தான் வர வேண்டும் என்று சொல்லியிருக்க மாட்டார். நம் எல்லாரையும்விட ராஜாஜி மிக நன்றாக விஷயம் அறிந்தவர்'' என்று முதல்வர் கருணாநிதிக்குப் பதில் அளித்துவிட்டார்.

கல்கி

மலர் 34

இதழ் 43



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ராஜாஜி கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தது இருபதாண்டுகளுக்கு முன்.

ராஜாஜி மறைந்து இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றன.

இப்பொழுதும் பழைய தவறான கருத்துக்களை வெளியிட்டுக் கொண்டிருப்பது முறையல்ல.

ஒரு ஹரிஜன மாணவன் போலீஸ் உத்தியோகத்துக்கு மனுச் செய்தான். அவன் உடல் மெலிந்திருக்கிறான், போலீஸ் வேலைக்கு லாயக்கில்லை என்று தேர்வுக் குழுவினர் அம்மாணவனை நிராகரித்தனர். அப்போது பிரதமராக இருந்த ராஜாஜி, ''ஐயா, அவன் வீட்டுச் சாப்பாட்டில் போதிய சத்துணவு இருப்பதில்லை. அது அவர்கள் உணவுப் பழக்கம். அதனால் அவன் அப்படி இருக்கிறான். மற்றபடி அவன் உடல் நலனில் கோளாறில்லை. வந்த ஒரு ஹரிஜன மாணவனை நிராகரிக்க வேண்டாம். நல்ல சத்துணவு சாப்பிடும்படி சொன்னால் அவன் உடல் தேறிவிடும். போலீஸ் வேலைக்குத் தகுதி பெற்றிடுவான்; அவனைத் தேர்ந்தெடுப்போம்'' என்றார்.

இப்படி ராஜாஜியால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் மாநில ஐ. ஜி. வரை உயர்ந்தார். இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள். இப்படி சமுதாயத்தில் பிற்பட்டவர்கள் முன்னுக்கு வர வேண்டும் என்று அயராது உழைத்த ராஜாஜி வண்ணான் மகன் வண்ணானாகவே இருக்க வேண்டும் என்பதற்காக ஒரு கல்வித் திட்டத்தைக் கொண்டு வருவாரா? படிப்பது ராமாயணம் இடிப்பது பெருமாள் கோவில் என்பது போல் ஒரு பக்கம் நினைவாலயம்; மறுபக்கம் நிந்தனை!

ராஜாஜியின் கல்வித் திட்டம்தான் என்ன?

நமது அரசியல் சாஸனம் பதினைந்தாண்டுகளுக்குள் எல்லாருக்கும் கல்வி புகட்டிவிட வேண்டும் என்று கூறுகிறது. மாநில அரசினிடமோ ஐந்து வயதுக்கு மேற்பட்ட அத்தனை குழந்தைகளுக்கும் படிக்கப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப் போதிய நிதி வசதியில்லை. எனினும் பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளின் எண்ணிக்கையை இருக்கிற வசதியைக் கொண்டே இரண்டு பங்காக உயர்த்தவே இரண்டரை மணி நேரப் படிப்பு என்ற திட்டத்தை ராஜாஜி கொண்டு வந்தார். ஒரு பள்ளிக்கூடத்தில் காலையில் ஐம்பது பிள்ளைகள் படித்தால், மாலையில் இன்னொரு ஐம்பது பிள்ளைகள் படிக்க முடியுமல்லவா? இருக்கிற ஆசிரியர்கள், பள்ளிக்கூட வசதிகள் - இவற்றைக் கொண்டே எழுத்தறிவு பெறும் குழந்தைகளின் எண்ணிக்கை இரட்டிப்பாக்க வேண்டும் என்பதுதான் ராஜாஜி கல்வித் திட்டத்தின் நோக்கம்.

ராஜாஜிக்கு நம் நாட்டுக் கிராம மக்களின் வாழ்க்கை முறை தெரிந்தாற்போல் மற்ற நகர்ப்புறத்துப் படித்த மக்கள் யாருக்கும்

தெரியாது. நம் நாட்டில் இரு பெரும் தொழில்கள் விவசாயமும் நெசவும். விவசாயியானாலும் சரி, நெசவாளியானாலும் சரி, ஒருவன் மட்டும் இத்தொழிலில் ஈடுபடுவதில்லை. அவன் குடும்பத்தார் — தாயார் மனைவி, தந்தை மக்கள் — அனைவரும் ஈடுபட வேண்டியிருக்கிறது. ஆகவே, வயலில், தறியில் வேலையிருக்கும்போது, மகனைப் பள்ளிக்கூடத்தில் அடைத்து வைக்க எந்த விவசாயிப் பெற்றோனும், நெசவாளித் தகப்பனும் விரும்புவதில்லை. அதனால்தான் நம் கிராமப்புறங்களிலுள்ள பள்ளிக்கூடங்களுக்குச் சிறுவர்கள் வரும் தொகை மிக மிகக் குறைவாக இருக்கிறது!

இந்த மக்களைப் பார்த்து, "உங்கள் குழந்தைகளைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்புங்கள். இரண்டரை மணிநேரம் எழுத்தறிவு பெறட்டும்; மற்ற நேரம் உங்களுக்கு உதவியாக இருப்பான்" என்று ராஜாஜி கூறினால், வண்ணான் மகன் வண்ணானாகவே இருக்க வேண்டும் என்று திட்டம் செய்கிறார் என்று கூறுவது உண்மையைத் திரிப்பது அல்லவா?

இன்னொரு விஷயம். நம் நாட்டில் பெரிய கட்டடக் கலை — என்ஜினியராக இருப்பார். ஆனால் அவருக்குச் செங்கல் வைத்துச் சிமிட்டி பூச வராது. இப்படி கல்விக்கும் — நேர்முக அனுபவத்துக்கும் ஒருவித சம்பந்தமும் இல்லாமலிருக்கிறது. அதனால் சிறு வயது முதலே, பள்ளிப் படிப்புடன் கைகளைப் பயன்படுத்தி வேலை செய்யும் அவரவர் வீட்டுத் தொழிலே பயிற்சியளிக்கிறது. அந்த நல்ல வாய்ப்பை இழந்துவிடக் கூடாது என்பதும் ராஜாஜியின் கல்வித்திட்டத்தின் மற்றொரு நோக்கமாகும்.

இன்றைய கல்வி முறை வெறும் குமாஸ்தாக்களைத்தான் உற்பத்தி செய்கிறது. அந்தக் குமாஸ்தா வேலையும் எத்தனை பேருக்குக் கொடுக்க முடியும்? ஆகவே, படிப்புடன்கூட அவரவர் வீட்டுத் தொழிலும் தெரிந்தால், தான் படித்த கல்வியை — அறிவை — படிப்பு முடிந்ததும் தனது வீட்டுத் தொழிலில் பயன்படுத்திப் பல முன்னேற்றங்கள் காண முடியும்; தொழில்கள் பெருகும் என்று நினைத்தார்.

கைக்கும் மூளைக்கும் ஏதோ நெருங்கிய தொடர்பு இருக்கிறது. 'கைகளைப் பயன்படுத்தி — உழைத்துவிட்டு வரும் குழந்தை பள்ளிக்கூடத்தில் விஷயங்களை வெகு எளிதாகவும், துரிதமாகவும் புரிந்து கொள்ளுகிறது. மேலும் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத் துடிப்பும் இருக்கிறது என்பது மேல் நாட்டுக் கல்வி அறிஞர்கள் கண்ட முடிவு. ஆகவே, தச்சர் மக்களும் கன்னான் மக்களும் சிறந்த மேதாவிகளாக, நாட்டுக்குப் பயனுடைய பணிகள் புரிபவர்களாக மலர மிக எளிய வாய்ப்பு — இந்த இரண்டரை மணிப் படிப்பு என்பது ராஜாஜியின் கருத்து. மேனாடுகள் பலவற்றில் உள்ளதுபோல் தொழில் சார்புள்ள கல்வி முறையை அமுல்படுத்த ஏராளமாகச் செலவாகும். கோடிக்கணக்கான ரூபாய் செலவு செய்ய ஏழை இந்தியா தயாராக இல்லாத நிலையில் அதிகப்படி செலவே யில்லாமல் தொழில் கல்வியும் ஏட்டுக் கல்வியும் ஒருங்கே மாணவர்கள் பெற வாய்ப்பளித்தார் ராஜாஜி.

இவ்வளவு அரிய திட்டம் குறுகிய அரசியல் காரணங்களால் அன்று கைவிடப்பட்டது.

எனினும் நாட்டில் உள்ள அறிஞர்கள் எல்லாரும் அதைப் போற்றுகின்றனர்.

இந்தத் திட்டத்துக்கு மாபெரும் எதிர்ப்பு கிளம்பிய போது, ராஜாஜி தமது திட்டத்தைக் கைவிட்டிருந்தால் பலகாலம் தமிழக முதன் மந்திரியாக இருந்திருக்கலாம்.

ஆனால் மந்திரி பதவியைவிட, தாம் கொண்டு வந்த திட்டம் தமிழக மக்களுக்கு நிரந்தரப் பயனை அளிக்கவல்லது என்று அவருக்கு மிகத் தெளிவாகத் தெரிந்தது. அதனால் திட்டத்தைக் கைவிடவில்லை. மந்திரிப் பதவியை விட்டார்.

ராஜாஜியின் திட்டத்தைப் புரிந்து கொள்ள முடியாவிட்டாலும் முதல்வர் திரித்துக் கூறாமலாவது இருக்கலாமே!

ராஜாஜி சிந்தனை

## உலகத்தின் பேரழகு

சீலமும் கல்வியறிவும் நல்லுணர்ச்சியும் அழகுபடக் கலந்து நிற்பது பண்பாடு என்றால், அது எல்லா நாட்டினருக்கும் ஒன்றுதானே எனத் தோன்றலாம். அப்படியல்ல. கண்ணும் மூக்கும் முகமும் மற்ற அங்கங்களும் அந்தமாகப் பொருந்தி நிற்பது அழகு என்றாலும் பிராணி உலகத்திலும் மக்கள் உலகத்திலும் எத்தனை வகை வகையான அழகைப் பார்க்கிறோம்! இவ்வாறே பல நாடுகளின் பலவிதப் பண்பாடுகள். உலகமெல்லாம் ஒன்று என்பது உண்மை. அழகெல்லாம் ஒன்று என்பதும் உண்மை. ஆயினும் வேறுபாடுகளே உலகத்தின் பேரழகு.

# என்ன சேதி?

## பத்மஜாவின் மறைவு

ஸ்ரீமதி பத்மஜா நாயுடுவின் மறைவில் சிறந்த சமூகசேவகியை இழந்து விட்டோம். பத்மஜா, கவியரசி ஸரோஜினி தேவியாரின் புதல்வியாவார். தாயைப் போலவே, சிறந்த கவிஞராகவும் விளங்கினார். ஆனால் தமது கவிதைகளை வெளியிடாமல் நெருங்கிய நண்பர்களிடம் மட்டும் காண்பித்து மகிழ்வாராம். பலப்பல சமூகப் பணிகளில் முன்னணியில் நின்று சேவை புரிந்திருக்கிறார். பத்தாண்டு காலம் வங்கத்தின் கவர்னராகப் பணிபுரிந்து பலப்பல சமூக நலத்துறைகளில் ஈடுபட்டிருக்கிறார். மத்திய அரசின் ஆட்சிமொழிக் கொள்கைக்கு விரோதமாக ஹிந்தி எதிர்ப்பு மகாநாட்டில் கலந்து கொள்ள ராஜாஜி கல்கத்தாவுக்குச் சென்ற போது, ஸ்ரீமதி பத்மஜா ராஜாஜியை கவர்னர் மாளிகையில் தமது விருந்தினராகத் தங்க வேண்டும் என்று கோரினார். ராஜாஜி, தாம் அரசாங்கத்துக்கு எதிராகப் பணிபுரிய வருகையில் அரசாங்க மாளிகையில் கவர்னரின் விருந்தினராகத் தங்குவது, கவர்னருக்குச் சங்கடம் விளைவிக்கலாம். அதனால் வெளியிலேயே தங்குவதாகக் கூறினார். ஸ்ரீமதி பத்மஜா நாயுடு, அதைப்பற்றித் தமக்குக் கவலையில்லை; தமது விருந்தினராகத்தான் தங்க வேண்டும் என்று வற்புறுத்தி ராஜாஜி கவர்னரின் விருந்தினராகத் தங்கச் செய்தார்.



கிழக்கு வங்கத்திலிருந்து, பங்களா தேஷ் போரின்போது வந்த அகதிகளுக்கு அவர் ஆற்றிய பணி பலரின் பாராட்டைப் பெற்றது. பிரதமர் இந்திராவுக்கும், ஏன் நேரு குடும்பத்துக்கே, பத்மஜாவின் மறைவு பெரு நஷ்டமாகும் என்பது, ஸ்ரீமதி இந்திரா காமன்வெல்த் மகாநாட்டிலிருந்து விரைந்து வந்ததே போதிய சான்றாகும்.

## என்று விடியுமோ!

மன்னார்குடி ராஜகோபால ஸ்வாமி கர்ப்பக்கிருகத்தில் அர்ச்சகரை, சேவார்த்திகளாக வந்த இருவரில் ஒருவர் மண்டையில் மரண அடி அடித்துக் கொலை செய்திருக்கிறார் என்ற செய்தியைக் கேட்டுப் பாரத தேசமே நிலை கலங்கி நிற்கிறது. ஸ்வாமி சந்நிதியிலேயே இத்தகையதோர் அநீதி இந்தப் பாரத புண்ணிய பூமியில் நடக்க வேண்டுமென்றால், அதிலும் தெய்வ பக்தி நிறைந்த தமிழ் நாட்டில் நடைபெற வேண்டுமானால், தமிழ் நாட்டிலுள்ள சமூக விரோத சக்திகளுக்கு எவ்வளவு சலுகையும் தைரியமும் இந்த ஆட்சியில் கிடைத்திருக்க வேண்டும் என்று ஒவ்வொரு இந்தியப் பிரஜையும் நினைக்காமலிருக்க மாட்டான்.

நாச்சியார் கோயிலிலிருந்து அரசாங்க அதிகாரிகள் நெல் கொள்ளையிட்ட சம்பவத்தைக் கேட்டு, தமிழக மக்களின் நெஞ்சில் பெருகிய ரத்தம் நிற்பதற்குமுன் அதைவிடக் கொடுமையான மன்னார்குடி அர்ச்சகர் கொலை விவகாரம் வந்துள்ளது. நாத்திகக் கொள்கைகளுக்கும் இயக்கங்களுக்கும் ஆட்சியாளர் ஆதரவு அளித்து வந்ததின் விளைவோ!



VOLTAS

# 23456

**செலவிடும் பணத்திற்கு முழுமையான பலன் தரும்**
**6 அருமையான அம்சங்கள் வழங்குகிறது காஸ்மோபாலிடன். எனவேதான்**
**1.5 டன் ரூம் ஏர்கண்டிஷனர்கள் அனைத்திலும் முன்னிற்கிறது:**

1. அனைத்திலும் சிறந்த சிக்கனம்
2. அனைத்திலும் அதிக குளுமை தருவது.
3. அனைத்திலும் சிறந்த குளுமை தரும் சக்தி
4. அனைத்திலும் சிறந்த உழைப்பு
5. அனைத்திலும் சிறந்த சௌகரியம்
6. அனைத்திலும் சிறந்த 'விற்பனைக்குப்-பின் ஸர்வீஸ்'



கண்கூடாக அறிந்திட, உங்கள் அருகாமையிலுள்ள வோல்டாஸ் விற்பனையாளரை அணுகுக அல்லது இலவச ஆலோசனைக்கு எழுதுக இம் முகவரிக்கு: த.பெ. எண். 900 பம்பாய் 400 001.
அதி நவீன 1.5 டன் ரூம் ஏர் கண்டிஷனர்.




**வழங்குவோர் வோல்டாஸ்: குளுமை தருவதையே குறிக்கோளாய்க் கொண்டவர்கள்.**

வோல்டாஸ் லிட்: பம்பாய், கல்கத்தா, சென்னை, புது தில்லி, பெங்களூர், லக்னௌ, பாட்னா, அஹமதாபாத், சிகந்தராபாத், கொச்சி, கான்பூர், ஜம்ஷெட்பூர்.

CMV-128-(8) TM

# முருகப் பெருமான் (11)

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

**வே**தத்துக்கு முக்கியம் வேள்வி. வேள்விக்கு முக்கியம் அக்னி. தெய்வங்களுக்குள் முருகன்தான் அக்னி ஸ்வரூபர். ஆகாச ரூபமான ஈசுவரனிடம் நெருப்புப் பொறியாகத் தோன்றி, வாயுவும் அக்னியும் அவரைச் சுமந்து, கங்கையிடம் சரவணப் பொய்கை என்ற நீர் நிலையில் விட, அங்கே அவர் ஷண்முகராகி, பிறகு பூமி உச்சமாக எழும்புகிற மலைச் சிகரங்களிலெல்லாம் கோயில் கொண்டு பஞ்சபூத சம்பந்தமும் பெற்றிருக்கிறார். ஆயினும் அவர் அக்னிச் சுடராகவே பிறந்தவர். ''அக்னி பூ:'' என்றே அவர் பெயர் ஒன்று உண்டு.

சேநானீ : அக்னி பூ : குஹ:

என்கிறது அமரகோசம்.

குகையில், நம் இருதய குகையில், ஆத்ம ஸ்வரூபமாக அரூபமாக இருக்கிற குகன், வெளியே குறிப்பாக அக்னி ஸ்வரூபியாக இருப்பதால், அக்னியாராதனத்தை மையமாகக் கொண்ட வேதத்தால் விசேஷிக்கப் படுபவனாக இருக்கிறான்.

வேத ரட்சணத்துக்காகவே தமிழ் நாட்டில் ஒரு முறையும், வட தேசத்தில் ஒரு முறையும் அவர் அவதரித்ததைச் சொல்கிறேன்.

**ப**ரமேசுவரனோ, முருகனோ அவதாரம் செய்ததாகச் சொன்னால் இழுக்கு என்று நினைக்கிறவர்கள் இருக்கிறார்கள். கர்ப்ப வாஸம் செய்தால் நிஷித்தம் என்பது அவர்கள் கருத்து. ஆனால் யோசித்துப் பார்த்தால், தப்புப் பண்ணுகிற ஜீவர்களை ரக்ஷிப்பதற்காக ஒரு பாபமும் தொட முடியாத ஸ்வாமி அவர்களில் ஒருத்தராகப் பரம கருணையுடன் அவதரிப்பதாகச் சொல்வது அவருக்குப் பெருமையே என்று தோன்றுகிறது. அருணகிரிநாதரைவிடப் பெரிய முருகனடியார் இருக்க முடியாது. அவரே திருப்புகழில் முருகனை,

உறை புகலியூரில் அன்று வருவோனே

என்கிறார். புகலியூர் என்பது சீர்காழி. அங்கே அவதரித்த ஞானசம்பந்தரைத்தான் சொல்கிறார்.

தமிழ் நாட்டில் ஏற்பட்ட சுப்பிரமணிய அவதாரம் சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள். திருஞான சம்பந்தர் என்றும் சொல்வதுண்டு. எதற்கு அவதரித்தார் என்பதைச் சேக்கிழார் ''வேதநெறி தழைத்தோங்க'' என்றே சொல்கிறார். தமிழ் வேதமான தேவாரம் பாடிய சம்பந்தரும் தம்மை, ''நான் மறை ஞான சம்பந்தன்'' என்றே சொல்லிக் கொள்கிறார். இந்த மறைகளை, மறைகூறும் யாகாதி கர்மாக்களை வாழ்த்தி வளர்ப்பது முருகனுக்கே ஏற்பட்ட ஒரு விசேஷமான காரியம் என்று, ''திருமுருகாற்றுப் படை'' சொல்கிறது.

ரொம்பவும் தொன்மை வாய்ந்த பத்துப் பாட்டில் முதலாவதாக இருக்கிற நூல் அது. தமிழ் நாட்டில் குறவர் இனத்திலிருந்து சகல சமுதாயத்தாரும் சுப்பிரமணியரை எப்படி எப்படி வழிபட்டார்கள் என்பதை அது சொல்கிறது. நக்கீரர் அதில் ஷண்முகநாதனின் ஆறுமுகங்களில் ஒவ்வொரு முகத்துக்கும் ஒரு விசேஷமான காரியத்தைச் சொல்கிறபோது,

ஒரு முகம்

மந்திர விதியின் மரபுளி வழாஅது
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே

மந்திர விதி முறை தப்பாமல், வைதிக சம்பிரதாயப்படி பிராமணர்கள் சொல்கிற யாகங்களைக் கண்டு இன்புற்று, அவற்றை வளர்க்கவே அவருக்கு ஒரு முகம் இருக்கிறது என்கிறார்.

''வேத வேள்வியை நிந்தனை செய்துழல்பவர்'' என்றும், ''மறை வழக்கமிலார்'' என்றும் சம்பந்தரே சொன்ன சமணர்களை வென்று மறுபடியும் வைதிக தர்மத்தை நிலை நாட்டத்தான் அவர் அவதாரம் பண்ணினார். சாட்சாத் அம்பாளுடைய க்ஷீரத்தைச் சம்பந்தர் பானம் பண்ணினார் என்பதே அவர் அவளுடைய நேர் பிள்ளையான சுப்பிரமணியம் என்பதற்கு அத்தாட்சி.

பிரம்மண்யத்தை — வைதிக தர்மத்தை — வாழ வைப்பதே தம் இலட்சியம் என்பதாலேயே ''வாழ்க அந்தணர்'' என்ற தேவாரப் பாடலால் முடிந்த முடிவாகச் சமணரை ஜயித்தார். அந்தக் கதையைச் சொல்கிறேன்.

(தொடரும்)



1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

# ஒயிலுக்கு எழில்சேர்ப்பது



**MONSIEUR**
டெரீன்-காட்டன் ஸூட்டிங்

**DAVARIN**
டெரீன்-காட்டன் ஷர்ட்டிங்

**Ravikunj**
வாஷ் அண்ட் வியர் பாப்ளின்கள்

**DAVANJOY**
டெரீன்-காட்டன் ஷர்ட்டிங்

## தாவண்கெரே

தாவணகெரே, கர்நாடகம்.

டெரீன்* கெமிக்கல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
அவர்களின் ரெஜிஸ்டேர்ட் டிரேட்மார்க்

Thomas/DCM 18 a tam

# சொல்லாத....

■ எம்.ஜி.ஆர். — இப்போது நடக்கும் கழக ஆட்சி இன்னும் இரண்டு வாரத்தில் கவிழ்ந்துவிடும். அல்லது இரண்டே மாதத்தில் கவிழ்ந்துவிடும். எழுபத்தாறு தேர்தலில் கவிழ்ந்துவிடும். அப்படியும் இல்லையென்றால் மறுபடியும் ஓர் ஐந்து ஆண்டு கழித்துக் கவிழ்ந்துவிடும். -- எஸ். மோகன்

■ முதல்வர் மு. கருணாநிதி—குதிரைப் பந்தயத்தை எடுத்த தற்காகச் சிலைஎன்றேமே, திரும்பவும் பந்தயத்தைக் கொண்டு வந்து விட்டால் என்ன செய்வது என்கிறார்களே! அதனாலென்ன, மனிதனைக் குதிரை இழுத்துச் செல்வது போல் வேறு ஒரு சிலை வைத்து, 'குதிரைப் பந்தயத்தைக் கொண்டு வந்த தற்குச் சிலை' என்றால் போயிற்று! ந. ராஜாராமன்

■ மஸ்தான் — என்னங்க இது, பகல் கொள்ளையா இருக்கே. எவனோ என் பர்ஸை 'அபேஸ்' பண்ணிட்டானே, பாவி அவன் உருப்படுவானா? -கோபி

■ டாக்டர் ஹண்டே — எனக்குக் கொஞ்சம்கூடப் பதவி மேல் ஆசை கிடையாது. அடுத்த சட்ட அமைச்சர் நான்தான் என்கிறார்கள். அது எப்படிச் சொல்ல முடியும்? சுகாதார அமைச்சராக வரக் கூடாதா? மூதறிஞர் ராஜாஜி இருந்திருந்தால் நான் சுகாதார அமைச்சராவதைத்தான் விரும்புவார்.
-- ப.த. தங்கவேலு

■ ஜகஜீவன்ராம் — நான் வருமான வரி கட்ட மறந்தேன் என்று சொல்கிறார்கள். நானாவது வரியை மறந்தேன். பல மந்திரிகள் மக்களையே மறந்துவிட்டார்கள். - டி. மாறன்

கே. எம். சுப்பிரமணியம் — நானும்தான் அங்கேயும் இங்கேயும் தாவினேன். இந்த வேலப்பன் நம்மையும் மிஞ்சி விட்டாரே! -- கே. கணேசன்

■ திருமதி கிரி — ஆண்டவனே! மறுபடியும் இந்திரா காங்கிரஸில் மோதல் வராதா? இந்திரா காந்தி மனசாட்சியின்படி நடக்கமாட்டாங்களா? எங்காத்துக்காரர் ஜனாதிபதி ஆகமாட்டாரா? நாங்க முன்னேமாதிரி உலகம் சுற்ற மாட்டோமா?
எஸ்.எஸ்.கே. மொஹிதீன்

■ மு. கருணாநிதி — இந்தக் கட்சித் தலைமைப் பதவிக்கு ஏன் ஆசைப்பட்டோம்? இதை மட்டும் ஏற்றுக் கொள்ளாமல் இருந்திருந்தால், நாமும் இந்நேரம் அ.தி.மு.கவுக்குப் போயிருக்கலாமே!

■ நிக்சன் — இந்த அமெரிக்காவில் பிறந்து ஏன் ஜனாதிபதியானோம்? இதைவிட இந்தியாவில் பிறந்து பிரதமராகியிருந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருந்திருக்கும்? இங்கு ஒரு வாட்டர்கேட் ஊழலுக்கே என்ன பாடுபடுத்திப் பதவியைவிட்டே ஓட்டி விட்டார்கள்? அங்கேயானால் 'நகர்வாலா' பிரச்னை, 'மாருதி' கார் விவகாரம், பாண்டி லைசென்ஸ் ஊழல், இன்னும் எத்தனை எத்தனையோ! அந்த நாட்டு மக்கள் மூச்சுவிட்டார்களா?
-மயிலப்பன்

■ பிரதமர் இந்திரா காந்தி — மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரதவிஷயத்தில் நான் தோற்றுவிட்டதாகச் சொல்கிறார்கள். இல்லை. அதில் நான் வெற்றிபெற்றுவிட்டேன். சாப்பிடமாட்டேன் என்று உண்ணாவிரதம் இருந்த மொரார்ஜியைச் சாப்பிட வைத்தது எனக்கு வெற்றிதானே! ந. சந்திரன்

■ ஜகஜீவன்ராம்—ஒரு மொரார்ஜி பாய் ஒரு வாரம் உண்ணாவிரதம் இருந்து என்ன பயன்? நாடு முழுதும் ஒரு வருடம் உண்ணாவிரதம் இருந்தால் நிலைமையைச் சமாளிக்கலாம்!

■ எம்.ஜி.ஆர். — நான் முதல்வரானால் சினிமாத் தொழிலை ஏன் அரசு எடுத்துக் கொள்ள வேண்டும்? அரசுத் தொழிலை வேண்டுமானால் சினிமா எடுத்துவிடுவோம்! - ஆர். பி. சாரதி

■ கல்கி ஆசிரியர் — கல்கி வாசகரே! நீங்கள் ஏப்ரல் மாதம் 26ந் தேதிக்குப் பிறகு, 'சொல்லாத வார்த்தைகள்' என்ற தலைப்பில், துணுக்கு அனுப்பி வைத்தீர்களானாலும், நாங்கள் அதை நன்கு ஆராய்ந்து, உங்களுடன் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொண்டு, உங்களுக்குப் பரிசுத் தொகை கிடைக்கவும் செய்கிறோம். - எஸ். கிருஷ்ணன்

# வார்த்தைகள்



# படித்தோம், சொல்கிறோம்!

## குடவாயில் கோட்டம்

போர் வெறி ரொம்பப் பொல்லாதது! அதன் அசுரப் பிடியில் காதல், அன்பு, பாசம் அனைத்துமே பொடிப் பொடியாய்ச் சிதறுண்டு போகின்றன.




முதல்வரின் முன்னுரையுடன்....

நீலவல்லியின் காதலுக்காக ஏங்கிய சேர இளவரசன் கோதை மார்பன், போர் வெறி யினால் நீலவல்லியின் தந்தை ஈழவனின் பல்லைப் பிடுங்கி நீலவல்லியின் சீற்றத்துக்கு ஆளாகிறான். நீலவல்லி படமெடுத்த நாகம்போல் சீறுகிறாள். "புத்தபெருமானின் பல் ஞானத்துக்கு உதவியது; என் தந்தையின் பல் வீரத்துக்கு உதவட்டும்!" அந்த அசுரப் போர் வெறிக்கு நீலவல்லியும் பலியாகிறாள்.

சேர இளவரசன் கோதைமார்பனின் யுத்த வெறி அதோடு நின்றதா? இல்லை, தொடர்கிறது!

போர் வெறியின் சீற்றத்தை, கோர தாண்டவத்தை இந்தக் 'குடவாயில் கோட்டம்' நாவலில் சிறப்பாகக் காண்கிறோம். கோதை மார்பனின் காதலில் ஈடுபட்ட நீலவல்லி, நல்லினி, அவளது போர் வெறியினால் சோக வாழ்வில் இழுத்துத் தள்ளப்பட்டவர்கள்!

சோகம், காதல், போர் வெறி இந்தச் சரித்திர நாவலில் நன்கு பின்னப்பட்டு நம்மைக் கண்கலங்க வைக்கின்றன. நீலவல்லி, நல்லினிக்காக இரு சொட்டுக் கண்ணீர் விட வைத்துவிடுகிறார் நாவலாசிரியர்.

'தினமணி'க் கதிர்' போட்டியில் பரிசு பெற்ற நாவல் இது. பல சரித்திரக் கதைகள் எழுதிப் பண்பட்ட கோவி. மணிசேகரனுடைய இந்த நாவலின் சிறப்பைக் கலைஞர் திரு மு. கருணாநிதியின் முன்னுரை எடுத்தியம்புகிறது.

—பி.எஸ்.எம்.

பிரசுரம்: குறள் நிலையம், சி.ஐ.டி. நகர் சென்னை-35; விலை ரூ. 8.00.



## சொல்லும் சுவையும்

தமிழுக்கு ஏற்றம் தருவது சங்க கால இலக்கியக் கருவூலம். தொட்ட தொட்ட இடங்களி லெல்லாம் இன்பச் சுவையைப் பெருக்குபவை சங்க கால இலக்கியங்கள். அவற்றுள் அகத்துறையைச் சார்ந்த பாடல்கள் குன்றாத சுவையுடையவை.

என்றென்றைக்கும், யாருக்கும், எப்பாலாருக்கும் இன்பம் பயக்கும் அகத்துறைப் பாடல்கள் குறுந்தொகையில் ஏராளமாக உண்டு. அப்பாடல் ஒவ்வொன்றும் தனித் தனிச் சிறுகதையாக விரிந்து மணம் பரப்பும்.

உலகத்து மொழிகளின் இலக்கியங்களிலேயே தனியானதோர் அங்கம் வகிப்பது காதல் உணர்வு ஒன்றுதான் என்பது யாவரும் அறிந்த ஒன்று. தமிழ்ப் புலவர்கள் தங்கள் நயத்தகு நாவன்மையையும், வியத்தகு புலமையையும் காட்டி மேற்படி அகத்துறையில் பலப் பல தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்கள் யாத்து அளித்திருக்கின்றனர். நிலக்களவர்ணனை, உரையாடல்கள் மனித உள்ளங்களின் உணர்ச்சியை வெளிப்படுத்தும் சுவையான நிகழ்ச்சிகள் அனைத்தும் சேர்ந்து குறுந்தொகைப் பாடல்களுக்குக் காவிய நயத்தையும், ஓவிய எழிலையும் நல்கித் தமிழ் இலக்கிய வரலாற்றின் பெருமையை என்றென்றும் எடுத்தியம்பும் தனித் தன்மையை அளித்து விட்டன.

தமிழ் நாட்டின் கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள், நற்றமிழ்ப் புலவர்; நயமிகு பேச்சாளர்; நல்ல எழுத்தாளர்; சீரிய சிந்தனையாளர்; தாம் பெற்ற இலக்கிய இன்பத்தை மற்றவரும் பெற்று மகிழவேண்டும் என்னும் எண்ணத்தோடு இந்நூலை எழுதி வெளியிட்டிருக்கிறார்.

இருபது பாடல்கள், அதாவது இருபது அகத்துறைச் சுவைப் பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு நாவலர் அவற்றுக்கு நல்லதொரு விளக்கம் தந்திருக்கிறார். கருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் மிக்க தமிழ் நடை, படிக்கப் படிக்க இனிமை பயக்கும் இனிய நடை நாவலருடையது. குறுந்தொகை ஓவியம் என்று நூலின் தலைப்பில் குறிப்பிட்டிருப்பது சாலச் சிறப்புடையதாகும். ஒவ்வொரு நிகழ்ச்சியும் படிப்பவர் மனத்தில் வண்ண ஓவியமாகவே விரியும்.

பிரசுரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை--8; விலை: ரூ. 6.00.

—ஸோமாஸ்

## அருள்வாக்கு

இறைக்க இறைக்க ஊறும் கிணற்று நீர். அதே போல் பெரியவர்களுடைய அருள்வாக்கைப் படிக்கப் படிக்க அறிவு தெளிவுபெறும்.

அருள்வாக்கு என்றால், அது காஞ்சிப் பெரியவர்களின் அருள்வாக்கையே குறிக்கிறது என்பதனைக் 'கல்கி' நேயர்கள் நன்கு அறிவார்கள். எதையும் உதாரணம் காட்டி விளக்குவதில் அவருக்கு இணையே கிடையாது.

ஆண்டவன் அருவமானவன்தான். காண முடியாததனால் அவன் இல்லை என்றே சொல்லும் அளவுக்குப் புத்தி பேதலித்துப் போவதுண்டு பலருக்கு. அவன் உண்டு என்பதை நிரூபிக்க அவர் அருவமான மின்சாரம், பல்புக்குள் பாய்ந்து ஒளிவீசுவதை நினைவூட்டுகிறார். இப்படி அவர் கட்டிக் காட்டும் பொழுது, ஆண்டவனும் ஒளிமயமானவன் என்பது மிகத் தெளிவாகி விடுகிறது. நம்ப மறுத்தவனும் நம்பத் தொடங்குகிறான்.

'கல்கி'யில் வெளியான இதுபோன்ற நாற்பது கட்டுரைகள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. கைக்குள் அடங்கும் புத்தகமாக வெளிவந்துள்ளது. படித்துப் புத்தி பூர்வமாக ஏற்று மனத்துள் பதிய வைத்துக் கொண்டால், அருமையான சாந்தி வாழ்வை மனிதன் மேற்கொள்ள முடியும். —அஜயம்

பிரசுரம்: பர்ல ரவி அண்டு கம்பெனி, 'திருமலை' 65-1, ஆர்க்காடு நெடுஞ்சாலை, சென்னை—24. விலை: ரூ. 3.00.



அமுத வாக்குகளைத் தரும் அருள் முகம்.....

## முள்ளும் மலர்ந்தது!

சம்பல் கணவாய்க் கொள்ளைக் கூட்டத்தினரைச் சீர்திருத்தும் பணியில் வினோபா அடிகளும், தலைவர் ஜெயப்பிரகாச் நாராயணரும் ஈடுபடத் தொடங்கியதிலிருந்து பாரத நாட்டு மக்களுக்கு அவர்கள் வாழ்க்கையில் பேரார்வம் ஏற்பட்டது. பல மொழிகளில் புத்தகங்களும் கட்டுரைகளும் வெளி வந்தன. தமிழில் பல நல்ல நவீனங்களும் சிறுகதைகளும் எழுதிப் புகழ்பெற்ற ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன் அவர்களுக்கும் அம்மக்களைப் பற்றி எழுதப் பேரார்வம் எழுந்தது இயல்பே. பொதுவாக, இம்மாதிரியான கதையோ நவீனமோ எழுத வேண்டும் என்றால், பத்திரிகைகளில் வரும் தகவல்களைக் கொண்டே கற்பனை செய்து எழுதி விடுவார்கள், நம் எழுத்தாளர்கள். மேனாடுகளில் ஆசிரியர்கள் இத்தகையதோர் எண்ணத்தைத் தெரிவித்தால், பிரசுரகர்த்தர்களே, பண உதவி செய்து ஆசிரியர்களை ஸ்தலத்துக்கே விரைந்து சென்று தகவல் சேகரித்து, நேரில் கண்டு அனுபவித்த ஆதாரங்கள் மீது கதை புனையச் சொல்வார்கள். நம் நாட்டில் பிரசுரகர்த்தர்களுக்கு அப்பழக்கம் கிடையாது. எழுத்தாளர்களுக்கோ அவ்வசதி கிடையாது. இத்தகைய சூழ்நிலையில் ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன் தமது கணவர் செய்து வந்த வேலையை ராஜிநாமா செய்ய வைத்து, சம்பல் கணவாய்மக்களுடன் நேரில் பழகிச் சேகரித்த தகவல்கள் மீது ஓர் அருமையான நவீனம் படைத்திருக்கிறார்.

போலீஸ் உடையில் தேவி சரணன் என்ற பெயரில் ஒரு கொள்ளைக்காரன் நாவரன, காலில் படுகாயத்துடன் ஓடிக் கொண்டிருக்கும் ரயிலில் முதல் வகுப்புப் பெட்டியில் ஒளிந்து கொள்ள வருகிறான். அப்பெட்டியில் டாக்டர் சிவானந்தமும், அவன் மனைவி காயத்ரியும் பிரயாணம் செய்கிறார்கள். அவன் இவன் யார் என்று தெரியாமல் அவன் தாகத்துக்கு அருமையாகக் கொண்டு வந்த கங்கை நீரை வழங்கி அவன் நாவறட்சியைப் போக்குகிறான். கங்கை நீரை வழங்கியதாலேயே அவனைத் தன் சகோதரனாகக் கொண்டுவிடுகிறான். சிவானந்தனே, இவன் கொள்ளைக்காரனாக இருக்கலாம் என்று ஐயம் எழுந்தாலும் அந்நள்ளிரவில் அவன் காயத்துக்குக் கட்டுப் போட்டுச் சிகித்சை செய்கிறான். இந்த அன்பு மழை, அவனுள் பாறுங் கல்லாக இறுகியிருந்த மனத்தை இளக்கி, இனி மற வாழ்வைவிட்டு அற வாழ்வை மேற்கொள்ள முடிவு செய்கிறது. அதற்குத்தான் எத்தனை இடையூறுகள். அவனது ஆசைநாயகி மிதிலேஷி, கட்டிய மனைவி ரஜனி இவர்களே இவனது புதிய முடிவுக்கு ஆட்சேபிக்கிறார்கள். அவன் கொள்ளைக்காரனாக வாழ்வதில் இப்பெண்கள் எப்படியெல்லாம் பெருமிதம் கொள்கிறார்கள் என்பதை மிக நேர்த்தியாக ஆசிரியை விளக்குகிறார். இத்தகைய காரணத்தினாலேயே, கொள்ளைக் கூட்டத்தினர் வாழையடி வாழையாக அப்பகுதிகளில் வாழ்கிறார்கள் போலும்.

தேவிசரணன், ரஜனியை ஏற்கும் முறையும், அவனது வாழ்க்கையும், பாத்திரப் படைப்பும் மிக மிக நவீனமாக இருக்கின்றன!

மலர்ந்த முட்கள்....



டாக்டர் சிவானந்தனும் காயத்ரியும் அருமையான பாத்திரப் படைப்புக்கள்! மிக அருமையான நவீனம். தமிழ்த் தாயின் திருவடிகளுக்கு ஒரு வாடா மலர் 'முள்ளும் மலர்ந்தது'. —எஸ்.வி.எஸ்.

பிரசுரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், 3, சின்ன ரெட்டித் தெரு, எழும்பூர், சென்னை — 600 008 விலை: ரூ.10.

## பாத்துமாவுடைய ஆடும் இளம் பருவத்துத் தோழியும்

வைக்கம் முகமது பஷீர் ஒரு கதையைக் கூறும் முறையே அலாதி. எதையும் நுணுகி நெருங்கி ஆராய்ந்து, அந்தந்த நிலையை அப்படியப்படியே படம் பிடித்துக் காட்டுவதில் வல்லவர்.

'பாத்தும்மாவுடைய ஆடு' என்னும் குறு நவீனத்தில் ஓர் ஆட்டை வைத்துக் கொண்டு பெண்களின் மனத்தைப் பலவாறாக எடை போடுகிறார். அதோடு வீட்டில் உட்கார்ந்து கற்பனை புரியும் ஆண் மனத்தையும் விண்டு வைக்கிறார்.

இன்னொரு குறு நவீனம் 'பால்ய கால சகி' என்பதாகும். இது ஒரு காதல் கதை.

இரண்டு குறு நவீனங்களையும் ஒரு நூலாக வெளியிட்டிருப்பது நேஷனல் புக் டிரஸ்ட். தமிழில் தருபவர் குமாரி சி.எஸ். விஜயம்.

நல்ல பொங்கலில் இடையே கல் அகப்படு கிறதுபோல், இரண்டொரு இடங்கள் நெருடு கின்றன. உதாரணத்துக்கு ஒன்று:

ஆடு மாடுகளுக்குச் 'சினை' என்ற சொல் இருக்கும்பொழுது கர்ப்பம் என்ற சொல் கருதி பேதமாக ஒலிக்கிறது. குறை கூறும் நோக்கம் அல்ல; நிறை காண முயலும் நோக்கமே இந்தச் சுட்டிக் காட்டுதலுக்குக் காரணம். —ரா.வீ.

விநியோகம்: பாரி நிலையம், 1-59, பிராட்வே, சென்னை. விலை ரூ. 4.00.

## ஒன்றிய உள்ளங்கள்

ஒரு நாவலைப் படிக்கும் போதே அதன் கதாநாயகன் கதாநாயகி யார் யார் என்பதை ஊகித்துவிடலாம். அவர்களைச் சுற்றியே அந்த நாவல் பின்னப்பட்டிருக்கும். ஆனால் இதற்கு விதிவிலக்காக ஒன்றிய உள்ளங்களில் உலாவும் ஒவ்வொரு பாத்திரங்களுமே கதாநாயக நாயகிகளாக விளங்குகிறார்கள். உழைப்பால் உயர்ந்து உன்னத நிலைக்கு வரும் ரவியைக் கதாநாயகனைக் கூறினால், அதை விட அவனுக்கு அவ்வப்போது ஊக்கமும் உத்஼ாகமும் தந்து நாவலின் ஆரம்ப முதல் கடைசி வரை கலந்து நிற்கும் மாஸ்டர்ஜியும் அவரது அன்பு மனைவியும் அற்புதப் பெண்ணுமான ஜீஜியும் அவனுக்கும் மேலே உயர்ந்து நிற்கிறார்களே? நாட்டுப்புறத்துப் பெண்ணாக வளர்ந்து நகரத்தில் வாழும் கணவனைத் தேடி அடைந்த சீதாவைக் கதாநாயகி என்றால் சுதந்திரப் பறவையாக, உல்லாசக் கிளியாகப் பறந்து திரியும் ரீட்டாவின் வாழ்வும் வாக்கும் சாதுரியமும் தியாகமும் உள்ளத்தில் பதிந்துவிடுகிறதே. ஆகவே பண்பட்ட எழுத்தாளரான உமாசந்திரன் அவர்களின் ஒன்றிய உள்ளங்கள் என்ற நாவலில் வரும் ஒவ்வொரு பாத்திரமுமே கதாநாயக நாயகியோடு போட்டி போடும் அதிசயத்தைக் காண முடிகிறது.

இன்னொரு புதுமையையும் இந்த நாவலில் காண முடிகிறது. கதையைப் படிக்கும் போதே அடுத்து இப்படித்தான் நடக்கும் என்று ஓர் ஊகம் உண்டாகும் வாசகனுக்கு. ஆனால் அப்படிப்பட்ட ஊகங்களையெல்லாம் உண்மையாக்காமல் கண்ணாமூச்சி காட்டிக் கொண்டு போகிறது கதை. ரீட்டாவின் சாகஸத்திலே ரவி மயங்கி விழப் போகிறான் என்று பல சந்தர்ப்பங்களில் 'ஏ' முத்திரைக் காட்சிகளை எதிர்பார்க்கிறோம். ஏமாற்றம்தான்! அதே மாதிரி கணவனின் முழு நேர அன்பும் அரவணைப்பும் இல்லாத சீதா தனிமையின் தாபத்தினால் தவறு செய்யப் போகிறாள் என்று நினைக்கிறோம். அங்கும் ஏமாற்றம்தான். நாம் சற்றும் எதிர்பார்க்காத நிலையில் ஒரு சராசரி மனிதனின் மனோவிகாரங்களுக்கு மாஸ்டர்ஜியை உள்ளாக்கி நம்மைத் திடுக்கிட வைக்கிறார். இங்கும் ஓர் அதிர்ச்சி நமக்கு. 'ஏ' முத்திரைக்குப் பல சந்தர்ப்பங்கள் நாவலில் இருந்தும் ஏனோ உமாசந்திரன் அத்தகைய 'நியூவேவ் காட்சி'களைக் கையாள வில்லை. பலதரப்பட்ட பாத்திரங்களை வைத்துக் கொண்டு ஆர்ப்பாட்டமான சம்பவங்களையோ அசாதாரணமான நிகழ்ச்சிகளையோ திணிக்காமல் இயற்கையான சூழ்நிலைகளையும் உரையாடல்களையும் கொண்டு அற்புதமான தோர் நாவலை உருவாக்கித் தந்திருக்கிறார் திரு உமாசந்திரன். நெஞ்சிலே பதியும் நடை, நினைவைவிட்டகலாத பாத்திரங்கள்.

இன்றைய நியூவேவ் நாவல்களினின்றும் தனித்து நிற்கும் வகையில் உருவாக்கி இருக்கிறார் ஒன்றிய உள்ளங்கள் என்ற இந்த நாவலை. இலக்கியம் என்ற வரிசையில் சேர்வதற்கான தகுதி இதற்கு உண்டு. ஏனென்றால் கதாசிரியர் தமது முன்னுரையில் இலக்கியம் என்பதற்குக் கூறியுள்ள விளக்கம் இந்த நாவலுக்கு முற்றும் பொருந்துகிறது. 'வடமொழியிலும் ஹிந்தியிலும் இலக்கியத்தைக் குறிக்கும் சொல் 'ஸாஹித்யம்' என்பது. ஹிதத்தோடு கூடியது. அதாவது நன்மை பயப்பது என்ற பொருள் கொண்டது இந்தச் சொல். இலக்கியம் என்பதே 'லட்சியம்' என்ற சொல்லின் திரிபுதானே? லட்சியம், அதாவது குறிக்கோள் உயர்வுக்கு வழிகாட்டுவதாகத்தான் இருக்க வேண்டுமேயொழிய தாழ்வுக்கு வழி காட்டுவதாக இருக்க முடியாது.' இவரது இந்த லட்சியம் இந்த நாவலின் மூலம் முழுமையாக நிறைவேறியுள்ளது.

இதன் மூன்றாவது சிறப்பு இந்த நாவலைப் பத்திரிகைக்காக அன்றி புத்தகத்துக்காகவே எழுதிக் கொடுத்திருக்கிறார் ஆசிரியர். நல்ல தரமான நூல்களைத் தரும் வானதி பதிப்பகத்தார் 'புதிய நாவல்' என்ற முத்திரையோடு இதைச் சிறப்பான முறையில் வெளியிட்டிருக்கிறார்கள். 460 பக்கங்கள் உள்ள இந்த நாவலைப் படித்து முடிக்கும் போது நமக்கு அயர்வு ஏற்படவில்லை. மன நிறைவே உண்டாகிறது. —கௌசிகன்

வெளியீடு: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை — 17, விலை: ரூ. 14.00.

## ஒரே ஒரு முறை

# ரூ. 500

## முதலீடு செய்யுங்கள்

# நீங்கள் ரூ. 2,00,000

## பரிசு பெறலாம்!

## சிறு சேமிப்பு பரிசு டெபாசிட் திட்டம்

உங்களது முதலீட்டைப் போல் 400 மடங்கு பரிசுத் தொகை! பரிசு கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் உங்களது முதலீடு பத்து ஆண்டுகளில் இரட்டிப்பாக்கப்பட்டு உங்களுக்கு அளிக்கப்படுகிறது. மாதந்தோறும் குலுக்கல். ஜாக்பாட் பரிசையோ அல்லது மற்ற ஐந்து பெரும் பரிசுகளில் ஒன்றையோ அல்லது 203 ஆறுதல் ரொக்கப் பரிசுகளில் ஒன்றையோ பெற 120 வாய்ப்புகள். 16ல் ஒருவர் பரிசு பெற சந்தர்ப்பம். இதைவிட சிறப்புத் திட்டம் ஏது?

மாதந்தோறும் வழங்கப்படும் மொத்தப் பரிசுத் தொகை ரூ 5.93 லட்சம். முழு விபரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள எமது அலுவலகத்துடன், தொடர்பு கொள்ளுங்கள் அல்லது எமது மத்திய அலுவலகத்திற்கோ, அல்லது எமது பெருநகர் அலுவலகங்களில் ஒன்றுக்கோ, மணியார்டர், டிராப்ட், போஸ்டல் ஆர்டர் அல்லது செக் மூலம் பணத்தை அனுப்பிப் பரிசுப் பத்திரத்தைப் பெறுங்கள். பொதுமக்களின் தொடர்ந்த வேண்டுகோளின்படி ரூ 50/-க்கான பரிசுப் பத்திரங்கள் இப்பொழுதும் வழங்கப்பட்டு வருகின்றன.

# பாங்க் ஆப் மதுரை லிட்.

*(தமிழ்நாடு மற்றும் கேரளாவில் நாட்டுடமையாக்கப்படாத வங்கிகளுள் பெரிய வங்கி)*

பதிவு மற்றும் மத்திய அலுவலகம்: 33, வடக்கு சித்திரை வீதி, மதுரை-625001 சென்னை பிரதான கிளை அலுவலகம்: 8, கொண்டி செட்டி தெரு, சென்னை-600001 தொலைபேசி: 21644, 23966 ★ சென்னையில் இதர கிளை அலுவலகங்கள்: ராயப்பேட்டை பெருஞ்சாலை, புரசவாக்கம், தியாகராய் நகர், அண்ணா நகர், மேற்கு மாம்பலம், நந்தனம், ஆவடி, கிடங்கு தெரு

பெருநகரக் கிளைகள்: பம்பாய், கல்கத்தா, புது டில்லி, பெங்களூர், ஹைதராபாத், திருவனந்தபுரம்.

*இந்தியாவெங்கிலும் கிளைகள் உள்ளன.*



பழனியப்பன் ராமசாமி
பொது நிர்வாகி



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## ஒன்பதாம் அத்தியாயம்

## யுத்த பேரிகை

"தேவி! அந்தப் புராதன பல்லவ சிம்மாசனம் உன்னைப் போன்ற உத்தமியைத் தனக்கு உரியவளாகப் பெறுவதற்கு எத்தனையோ காலம் தவம் செய்திருக்க வேண்டும்! உன்னைப் பட்டமகிஷியாகப் பெறுவதற்கு நான் எவ்வளவோ ஜன்மங்களில் பாக்கியம் செய்திருக்க வேண்டும்!'' என்று மாமல்ல சக்கரவர்த்தி கூறியபோது, அவரது வைரம் பாய்ந்த கம்பீரக் குரலும் தழுதழுத்தது. வானமா தேவிக்கோ புளகாங்கிதம் உண்டாயிற்று. ஏதோ சொல்ல வேண்டும் என்று தேவி பிரயத்தனப்பட்டாள். ஆனால், வார்த்தைகள் வெளி வர

வில்லை. பல்லவேந்திரர் மேலும் கூறினார் :

'' பாண்டியர் குலவிளக்கே ! கேள்! நீ என்னுடைய பட்டமகிஷி மட்டுமல்ல; எனக்குப் பிறகு இச்சிம்மாசனத்துக்குரிய மகேந்திர குமாரனுடைய அன்னை. பல்லவ சாம்ராஜ்யத்துப் பிரஜைகளையெல்லாம் ஒரு நாளிலே ஒரு நொடியிலே வசீகரித்து அவர்களுடைய பக்தியைக் கொள்ளை கொண்ட சக்கரவர்த்தினி. என் தந்தை மகேந்திரர் காலமான சில நாளைக்குப் பிறகு, மந்திரி மண்டலத்தார் எனக்குப் பட்டாபிஷேகம் செய்து பல்லவ சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள். அதே சிம்மாசனத்தில் என் அருகில் நீயும் வீற்றிருந்தாய். நம் இருவருக்கும் ஆசி கூறிய எங்கள் குல குரு ருத்ராச்சாரியர் நாம் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் காட்சியானது சொர்க்கலோகத்துத் தேவ சபையில் தேவேந்திரனும் இந்திராணியும் கொலுவீற்றிருப்பதைப் போல் இருக்கிறது என்று ஆசி கூறினார். அதைக் கேட்ட சபையோர் குதூகலத்துடன் ஆரவாரித்து மகிழ்ந்தார்கள். கொஞ்சகாலம் நாட்டில் மழை பெய்யாமல் இருந்ததையும், நீ காஞ்சிநகர் புகுந்ததும் பெரு மழை பெய்ததையும் நினைவு கூர்ந்த சபையோர், 'நீ சாக்ஷாத் இந்திராணியேதான், சந்தேகமில்லை' என்று ஒருமுகமாகக் கூறினார்கள். செந்தமிழ்ப் புலவர்கள் உனக்கு வானமா தேவி என்று பெயர் சூட்டி வாழ்த்துப் பாடல்கள் புனைந்தார்கள். அது முதல் அரண்மனையிலும் நாடு நகரங்களிலும் உன்னை இந்திராணி என்றும், வானமா தேவி என்றும் என் பிரஜைகள் பெருமையோடு சொல்லி வருகிறார்கள். அப்பேர்ப்பட்ட உன்னை இந்தப் பல்லவ சிம்மாசனத்தி லிருந்து இறக்கிவிடுவதற்கு இந்த உலகிலே வேறு யாருக்கும் உரிமை கிடையாது.''

வானமாதேவி அப்போது குறுக்கிட்டு ஒரு கேள்வி கேட்டாள் : '' சுவாமி! இந்தப் பல்லவ சிம்மாசனத்துக்கு மட்டும்தானே நான் உரிமை உடையவள்? தங்களுடைய இதய சிம்மாசனத்தில் எனக்கு இடம் கிடையாது அல்லவா ?''

சற்றும் எதிர்பாராத மேற்படி கேள்வி மாமல்லரை ஒரு கணம் திகைப்படையச் செய்துவிட்டது. சற்று நிதானித்த பிறகு, வானமா தேவியை அன்புடன் நோக்கிச் சொன்னார்.

'' ஆகா ! இத்தகைய சந்தேகம் உன் மனத்திலே ஏற்பட்டிருந்தும் சென்ற ஒன்பது வருஷ காலமாக என்னை ஒன்றும் கேளாமலே இருந்து வந்திருக்கிறாயல்லவா ? தமிழ் மறை தந்த திருவள்ளுவ முனிவர்,

'' தெய்வந் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை''

என்று கூறியருளினார். அவருடைய பொய்யா மொழிக்கு நீயே உதாரணமாவாய். சாதாரணப் பெண் ஒருத்திக்கு அத்தகைய சந்தேகம் தோன்றியிருந்தால் தினம் நூறு தடவை அதைப் பற்றிக் கேட்டுக் கணவனை நரகவேதனைக்கு உள்ளாக்கியிருப்பாள்!''

''பிரபு! அப்படியானால் இந்த அரண்மனையிலே நான் கேள்விப்பட்டதிலும் நாட்டிலும் நகரத்திலும் ஜனங்கள் பேசிக் கொள்வதிலும் உண்மை கிடையாதா ? அதை எண்ணிக் கொண்டு நான் எத்தனையோ இரவுகள் உறக்கமின்றிக் கழித்ததெல்லாம் வீண் மடமைதானா?'' என்று வானமா தேவி சிறிது உற்சாகத்துடன் கேட்டாள்.

''தேவி! உண்மையில்லாமல் ஒரு வதந்தி பிறக்காது. நீ கேள்விப்பட்டது முழுதும் பொய்யல்ல. ஆனால், அது என் பூர்வ ஜன்மத்தைச் சேர்ந்த விஷயம்'' என்று கூறிவிட்டு மாமல்லர் சற்று நேரம் அக நோக்குடன் இருந்தார். பின்னர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு அவர் கூறியதாவது :

''ஆம்; அது என் பூர்வ ஜன்மத்தின் நிகழ்ச்சி ; தேய்ந்து மறைந்து போன பழைய கனவு. என்னுடைய இளம் பிராயத்தில், மகேந்திர பல்லவரின் ஏக புதல்வனாய், கவலையும் துயரமும் இன்னதென்று அறியாதவனாய் நான் வளர்ந்த காலத்தில், வானமும் பூமியும் ஒரே இன்பமயமாய் எனக்குத் தோன்றிய நாட்களில், ஒரு சிற்பியின் மகள் என் இதயத்தில் இடம் பெற்றிருந்தாள். அவளுக்காக என் உடல், பொருள், ஆவியையும் இந்தப் பல்லவ குலத்தின் பெருமையையும் தத்தம் செய்ய நான் சித்தமாயிருந்தேன். ஆனால், என்றைய தினம் அவளுடைய உள்ளத்திலே அன்பைக் காட்டிலும் ஆங்காரம் மேலிட்டு என்னுடைய இதமான வார்த்தையை உதாசீனம் செய்தாளோ, நூறு காத தூரம் நான் அவளைத் தேடிச் சென்று என்னுடன் வரும்படி அழைத்தபோது வெறும் பிடிவாதம் காரணமாக என்னுடன் வருவதற்கு மறுத்தாளோ, அன்றே என்னுடைய இதயத்திலிருந்து அவள் விலகிச் சென்றுள். இன்னமும் அவளை நான் மறந்துவிடவில்லை; மறக்க முடியவும் இல்லை. இதற்குக் காரணம்

அவனுக்கு நான் அன்று கொடுத்த வாக்குறுதியை இன்னும் நிறைவேற்றாமலிருப்பதுதான். தூர தேசத்தில் பகைவர்களுடைய கோட்டைக்குள்ளே வசிக்கும் சிவகாமியின் ஆவியானது என்னை இடைவிடாமல் சுற்றிச் சுற்றி வந்து, பகலில் அமைதியில்லாமலும் இரவில் தூக்கம் இல்லாமலும் செய்து வருகிறது. என்றைய தினம் அவளுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுகிறேனோ, வாதாபியை வென்று அவளை விடுதலை செய்து அவள் தந்தையிடம் ஒப்புவிக்கிறேனோ அன்று அந்தப் பாதகியின் ஆவி என்னைச் சுற்றுவதும் நின்று போய்விடும். அன்றைக்கே அவளுடைய நினைவை என் உள்ளத்திலிருந்து வேரோடு பிடுங்கி எறிந்துவிடுவேன். பின்னர், என் மனத்திலே உன்னையும் நம் அருமைக் குழந்தைகளை



யும் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகோந்நதத்தையும் தவிர, வேறெதுவும் இடம் பெறாது. தேவி! நான் சொல்வதில் உனக்கு நம்பிக்கை ஏற்படுகிறதா? அல்லது இதெல்லாம் உலகில் காமாதுரர்களான புருஷர்கள் சாதாரணமாய்ச் சொல்லும் பசப்பு வார்த்தைகள் என்றே நினைக்கிறாயா?'' என்று மாமல்லர் கேட்டார்.

**வா**னமாதேவி அந்தக் கணமே தந்தக் கட்டிலிலிருந்து கீழிறங்கி மாமல்லரின் பாதங்களைத் தொட்டு, ''பிரபு! தங்களுடைய வார்த்தை எதிலும் நான் அவநம்பிக்கை கொள்ளேன். தங்களுடைய வாக்குக்கு விரோதமாக என் கண்ணெதிரிலே தாங்கள் நடந்து கொள்வதாகத் தோன்றுமானால் என் கண்களின் பேரிலேதான் அவநம்பிக்கை கொள்வேன். தங்களைச் சந்தேகிக்க மாட்டேன்!'' என்றாள்.

சந்தேகமும் ஆங்காரமும் நிறைந்த சிவகாமியின் காதலுக்கும் இந்தத் தென் பாண்டிய நாட்டு மங்கையர் திலகத்தின் சாத்விகப் பிரேமைக்கும் உள்ள வேற்றுமையைக் குறித்து மாமல்லரின் உள்ளம் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சட்டென்று சுய நினைவு பெற்று வானமா தேவியை இரு கரங்களாலும் தூக்கிக் கட்டிலில் தம் அருகில் உட்கார வைத்துக் கூறினார்:

''இந்த விஷயத்தைப் பற்றி இப்போது கேட்டதே நல்லதாய்ப் போயிற்று. என் தலையிலிருந்து ஒரு பெரிய பாரத்தை நீக்கி விட்டாய். அதற்கு ஈடாக உன்னிடம் இந்தப் பெரிய இராஜ்யத்தின் பாரத்தை நான் ஒப்புவித்துவிட்டுப் போகப் போகிறேன். நான் இல்லாத காலத்தில் மந்திரி மண்டலத்தார் இராஜ்ய விவகாரங்களைக் கவனித்துக் கொள்வார்கள் என்றாலும், முக்கியமான காரியங்களில் உன்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டே செய்வார்கள். ஆனால், தேவி! ஒரே ஒரு முக்கியமான காரியத்தை மட்டும் உன்னுடைய தனிப் பொறுப்பாக ஒப்புவிக்கப் போகிறேன். அதை அவசியம் நிறைவேற்றித் தருவதாக நீ எனக்கு வாக்களிக்க வேண்டும்'' என்று சக்கரவர்த்தி கேட்டதும் வானமா தேவியின் முகத்தில் பெருமிதக் கிளர்ச்சி காணப்பட்டது.

''பிரபு! இந்த அபலைப் பெண்ணினால் ஆகக்கூடிய காரியம் ஏதேனும் இருந்தால் கட்டளையிடுங்கள். அதை என்னுடைய பரம பாக்கியமாகக் கருதி நிறைவேற்றி வைக்கிறேன்!'' என்றாள்.

''காரியம் இருக்கிறது. அது மிகவும் முக்கியமான காரியம். உன் சகோதரன் மகன் நெடுமாறன் ஒரு பெரிய சைனியத்துடன் வாதாபிப் படையெடுப்பில் என்னோடு சேர்ந்து கொள்வதாகப் புறப்பட்டவன் இன்னும் வந்து சேரவில்லை. வராக நதிக் கரையில் தேக அசௌக்கியம் காரணமாகத் தங்கியிருப்பதாகவும், ஒரு வாரத்தில் காஞ்சிக்கு வந்து சேருவதாகவும் அதுவரையில் நான் அவனுக்காகக் காத்திருக்க வேண்டும் என்றும் சொல்லி அனுப்பியிருக்கிறான். அப்படி நான் தாமதிப்பது அசாத்தியமான காரியம். நமது குலகுரு பார்த்துச் சொன்ன நாளில் நான் கிளம்பியே தீரவேண்டும். தேவி! வழியில் நெடுமாறன் சமணர்களின் மாய வலையிலே விழுந்திருப்பதாக எனக்குச் செய்தி எட்டியிருக்கிறது. சமணர்கள் என்மீது எப்படியாவது பழி தீர்க்க வந்

## உங்கள் காப்பியை இனிமையாக்க இதோ ஓர் வழி ரிக்கரி இன்ஸ்டண்ட் கேட்டு வாங்குங்கள்




## ஒரு சந்திரிகா (மீடியம்) சோப்பு

# இலவசம்










ஒவ்வொரு 50 கிராம்

## ரிக்கரி

இன்ஸ்டண்டுடன்

ரிக்கரி உங்கள் வீட்டுச் செலவைக் குறைக்கிறது.

## ரிக்கரி®

இன்ஸ்டண்ட்

-விசேஷச் சுவை கொண்ட ஸ்பெஷல் காப்பி

NRCM-10-74 TAM

சம் கொண்டிருப்பதை நீ அறிவாய். இந்த நிலையில் நெடுமாறனால் இவ்விடம் ஏதும் நேராமல் நீதான் பார்த்துக்கொள்ள வேண்டும்.''

இப்படி மாமல்லர் கூறி வாய் மூடுவதற்குள், வானமா தேவி, ''பிரபு! இந்த விஷயத்தில் தாங்கள் கொஞ்சமும் கவலையின்றி நிம்மதியாகச் செல்லுங்கள். என் பிறந்தகத்தைச் சேர்ந்தவர்களால் தங்களுக்கு எவ்விதக் கெடுதலும் நேர்வதற்கு நான் விடமாட்டேன். நெடுமாறனுக்கு அத்தகைய தீய எண்ணம் ஏதேனும் இருப்பதாகத் தெரிந்தால் இந்தக் கையிலே கத்தி எடுத்து அவனுடைய நெஞ்சிலே பாய்ச்சிக் கொன்று விடுவேன்!'' என்று கம்பீரமாய் மொழிந்தாள்.

மாமல்லர் இலேசாகப் புன்னகை புரிந்து விட்டுக் கூறினார்: ''வேண்டாம் வேண்டாம், உன்னுடைய மல்லிகை இதழ் போன்ற மிருதுவான தளிர்க் கரங்கள் கத்தியைப் பிடித்தால் நோகுமல்லவா? நீ கத்தி எடுக்க வேண்டாம். அப்படி ஒருவேளை அவசியம் நேர்ந்தால் நமசிவாய வைத்தியரைக் கேட்டு நல்ல விஷமாக வாங்கி வைத்துக் கொண்டு, அதைப் பாலில் கலந்து கொடுத்துவிடு!— ஆனால், அந்தமாதிரி அவசியம் ஒன்றும் அநேகமாக நேராது. என்னுடைய சந்தேகம் கொஞ்சமும் ஆதாரமற்றதா யிருக்கலாம். என்றாலும் இராஜ்யப் பொறுப்பு வகிப்பவர்கள் இப்படி யெல்லாம் சந்தேகப்பட்டு முன்ஜாக்கிரதை செய்தல் அவசியமா யிருக்கிறது! அதிலும் யுத்தத்துக்காகத் தூர தேசம் கிளம்பும் போது சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமல்லவா?''

இப்படி மாமல்லர் கூறி முடித்தாரோ இல்லையோ, அரண்மனையின் கனமான நெடுஞ்சுவர்களை யெல்லாம் அதிரச் செய்து கொண்டு ஒரு பெரு முழக்கம் கேட்டது. கேட்கும்போதே ரோமச் சிலிர்ப்பு உண்டாகும்படியான அந்தச் சத்தம் வெளியிலே எங்கேயோ தொலை தூரத்திலிருந்து வருகிறதா அல்லது தரைக்கு அடியில் பாதாளத்திலே யுள்ள பூகர்ப்பத்திலேயிருந்து வருகிறதா என்று தெரியாதபடி அந்தப் படுக்கை அறைக்குள்ளே எப்படியோ புகுந்து வந்து சூழ்ந்தது. அந்தச் சத்தம் காதினால் கேட்கக் கூடிய சத்தம் மட்டும் அல்ல! உடம்பினாலேயே ஸ்பரிசித்து உணரக்கூடிய சத்தமாயிருந்தது.

''ஆகா! நடு ராத்திரியாகி விட்டது! யுத்த பேரிகை முழங்குகிறது!'' என்று வீர மாமல்லர் துள்ளி எழுந்தார்.

அவ்வாறு மாமல்லரைத் துள்ளி எழச் செய்த யுத்தப் பேரிகையின் முழக்கம் அவருடைய மனக் கண்ணின் முன்னால் அதிபயங்கரமான போர்க் களங்களின் காட்சியைக் கொண்டு வந்து காட்டியது. பெரிய கருங் குன்றுகள் இடம் விட்டு நகர்ந்து ஒன்றையொன்று தாக்குவது போல் ஆயிரக்கணக்கான போர் யானைகள் கோரமாகப் பிளிறிக் கொண்டு ஒன்றை யொன்று மோதித் தாக்கின. நூறு நூறு ரதங்கள் பூமி அதிரும்படியாக விரைந்து சென்று ஒன்றின் மீது ஒன்று இடித்துத் தூள் தூளாகி விழுந்தன. பதினாயிரக் கணக்கான குதிரைகள் வாயு வேகமாகப் பாய்ந்து சென்று போர்க்களத்தின் மத்தியில் சந்திக்க, அவற்றின் மீதிருந்த போர் வீரர்கள் கையிலிருந்த ஈட்டிகளைக் கொண்டு ஒருவரை யொருவர்



தாக்கியபோது ஈட்டிகள் மின்னலைப் போல் ஒளி வீசிக் கண்களைப் பறித்தன. இலட்சக் கணக்கான போர்வீரர்கள் கூரிய வாட்களைக் கொண்டு ஒருவரை யொருவர் வெட்டித் தள்ளினார்கள். பார்க்கப் பயங்கரமான யுத்த வெள்ளம் ஒரு பெரிய மாநதியின் பிரவாகத்தைப் போல் ஓடிற்று. அந்தப் பிரவாகத்தில் உயிரிழந்த கரிகளும், பரிகளும், காலும், கையும், தலையும் வெட்டுண்ட மனிதர்களின் உடல்களும் மிதந்து சென்றன.

இந்தப் பயங்கரமான கோரக் காட்சியுடன் கலந்து ஒரு பெண்ணின் ஆங்காரம் நிறைந்த முகத் தோற்றமும் மாமல்லரின் அந்தக் காட்சியில் தென்பட்டது! அது சிற்பி மகள் சிவகாமியின் முகம்தான் என்று சொல்ல வேண்டியதில்லை யல்லவா?

## பத்தாம் அத்தியாயம்

# மங்கையர்க்கரசி

அர்த்த ராத்திரியில் அந்தப்புரத்துக்குள்ளே புகுந்து மாமல்லரின் காதிலே ஒலித்த யுத்த பேரிகையின் முழக்கமானது அந்தக் காஞ்சி நகரில் வாழ்ந்த இலட்சக் கணக்கான மக்கள் காதிலும் ஒலித்தது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வித உணர்ச்சியை அந்த முழக்கம் உண்டாக்கிற்று.

அந்த நடுநிசி வேளையில் காஞ்சி அரண்மனையைச் சேர்ந்த நந்தவனத்தில் பிராயம் முதிர்ந்த ஒரு மனிதரும் கட்டழகியான ஓர் இளம் பெண்ணும் தனிமையாக உலாவிக் கொண்டிருந்தார்கள். வானத்திலே பிரகாசித்துக் கொண்டிருந்த சந்திரனோடு போட்டியிட்டுக் கொண்டு அந்தப் பெண்ணின் வதன சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. யுத்த பேரிகை முழக்கத்தைத் திடீரென்று கேட்டதும் பெருங்



காற்றில் பூங்கொடி நடுங்குவதைப் போல் அந்த யுவதியின் உடம்பும் நடுங்கிற்று. பீதி நிறைந்த குரலில், ''அப்பா! இது என்ன ஓசை?'' என்று கேட்டுக் கொண்டே அந்தப் பேதைப் பெண் தன் தந்தையைக் கட்டிக் கொண்டாள்.

''குழந்தாய்! யுத்த பேரிகை முழங்குகிறது! நான் உன்னிடம் விடைபெற வேண்டிய சமயம் நெருங்கி விட்டது!'' என்று அந்தப் பெரியவர் கூறினார்.

நிலா வெளிச்சத்தில் சற்று உற்றுப் பார்த்தோமானால் அந்த இருவரையும் நாம் ஏற்கனவே பார்த்திருக்கிறோம் என்பது நினைவு வரும். ஆம்! அன்று பகலில் ஏகாம்பரேசுவரர் சந்நிதியில், புருஷர்களின் கோஷ்டியிலே அந்தப் பெரியவரும், பெண்களின் வரிசையிலே அந்த இளநங்கையும் நின்றுகொண்டிருக்கவில்லையா? அந்தப் பெண்ணின் முகத்திலே அப்போது ததும்பிய பரவசமான பக்தி பாவத்தைக் கண்டு நாம் வியக்கவில்லையா?

அவ்விருவரும் கொடும்பாளூர் சோழ வம்சத்தைச் சேர்ந்த செம்பியன் வளவனும், அவனுடைய செல்வத் திருமகளுமேயாவர்.

கரிகால் வளவன் காலத்திலிருந்து சில நூற்றாண்டுகள் மிகப் பிரபலமாக விளங்கியிருந்த சோழ இராஜ்யமானது நாளடைவில் சீரும் சிறப்பும் குன்றித் தெற்கே பாண்டியர்களாலும் வடக்கே பல்லவர்களாலும் நெருக்கப்பட்டு மிக்க க்ஷீண நிலையை அடைந்ததோடு சோழ வம்சமும் இரண்டு மூன்று கிளைகளாகப் பிரிந்து போயிருந்தது. உறையூரில் நிலைபெற்ற சோழ வம்சத்து மன்னர் ஒரு சிறு இராஜ்யத்துக்கு உரியவர்களாயிருந்தார்கள். கொடும்பாளூர்க் கிளை வம்சத்தின் பிரதிநிதியாக அப்போது விளங்கிய செம்பியன் வளவனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. குலத்தை விளங்க வைக்க ஒரு புதல்வி மட்டுமே இருந்தாள். அந்த அருமைக் குமாரிக்கு 'மங்கையர்க்கரசி' என்ற செல்வப் பெயரைச் செம்பியன் வளவன் சூட்டினான். ஆசை காரணமாகத் தகப்பன் சூட்டிய பெயர் என்றாலும், பெண்ணைப் பார்த்தவர்கள் அனைவரும், 'இத்தகைய பெண்ணுக்கு இந்தப் பெயரே தகும்' என்றார்கள். அப்படி தேக சௌந்தரியத்திலும் குண சௌந்தரியத்திலும் அவள் சிறந்து விளங்கினாள்.

தன்னுடைய ஆயுள் முடிவதற்குள்ளே தன் மகளைத் தென்னாட்டின் சிறந்த இராஜ வம்சம் ஒன்றில் பிறந்த இராஜ குமாரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்துவிட வேண்டும் என்ற ஆசை செம்பியன் மனத்திலே குடிகொண்டு இரவு பகல் அதே கவலையாக இருக்கும்படி செய்தது. இந்த நிலையில், வாதாபி படையெடுப்புச் சைனியத்தில் வந்து சேரும்படி தென்னாட்டு மன்னர் குலத்தினர் அனைவருக்கும் மாமல்லரிடமிருந்து ஓலை வந்ததுபோல் அவனுக்கும் வந்து சேர்ந்

தது. செம்பியன் தன் வாழ்நாள் மனோரதம் நிறைவேறுவதற்கு இதுவே தருணம் என்று எண்ணி உற்சாகமடைந்தான். இந்தத் தள்ளாத பிராயத்தில் அவன் போருக்குக் கிளம்பி வந்ததற்கு முக்கிய காரணம், காஞ்சி நகரில் அச்சமயம் பல தேசத்து இராஜ குமாரர்கள் கூடியிருப்பார்கள் என்றும், அவர்கள் யாருக்கேனும் மங்கையர்க்கரசியை மணம் புரிவிப்பது ஒருவேளை சாத்தியமாகலாம் என்றும் அவன் நம்பியதுதான்.

"அப்பா! உண்மையாகவே என்னை இங்கே விட்டு விட்டுப் போகப் போகிறீர்களா? இந்தப் பெரிய அரண்மனையில், முன் பின் தெரியாதவர்களுக்கு மத்தியில், நான் எப்படிக் காலம் கழிப்பேன்? ஒருவேளை யுத்த களத்திலே தங்களுக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என் கதி என்ன ஆவது?" என்று புலம்பினாள் செம்பியன் குமாரி மங்கையர்க்கரசி.

"குழந்தாய்! நம் குலதெய்வமான முருகப் பெருமான் உன்னைக் காப்பதற்கு இருக்கும்போது நீ ஏன் கவலைப் படவேண்டும்? எந்தப் பெருமானுடைய வேலாயுதமானது மலையைப் பொடியாக்கியதோ, கடல் நீரை வற்றச் செய்ததோ, சூரனை வதைத்ததோ, பானு கோபனை சம்ஹாரித்ததோ, தேவர்களுக்கு அபயப் பிரதானம் அளித்ததோ அத்தகைய வெற்றிவேல் உனக்கு என்றும் துணையாயிருக்கும். குழந்தாய்! நீ கொஞ்சமும் அதைரியப்படாமல் எனக்கு விடை கொடுக்க வேண்டும்" என்று செம்பியன் கூறியதைக் கேட்டு மங்கையர்க்கரசி மெய் சிலிர்த்துப் பரவச நிலை அடைந்து நின்றாள்.

அவளுடைய பக்தி பரவச நிலையைத் தெரிந்து கொள்ளாத தந்தை, "அம்மா! வேலும் மயிலும் உனக்குத் துணையாக இருப்பதோடு, மாமல்ல சக்கரவர்த்தியின் தாயார், மகேந்திர பல்லவரின் பட்டமகிஷி, புவனமா தேவியும் உனக்கு ஆதரவாக இருப்பார். உன்னைத் தன் சொந்த மகளைப் போல் பாதுகாத்து வருவதாக எனக்கு வாக்குத் தந்திருக்கிறார். நீ உன் அன்னையை இளம் பிராயத்தில் இழந்து விட்டாய். புவன மாதேவிக்கோ சொந்தப் புதல்வி கிடையாது. உன்னைத் தம் கண்மணியைப் போல் பாதுகாத்துத் தருவதாக என்னிடம் உறுதி கூறியிருக்கிறார். ஆகையால், என் செல்வ மகளே! நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். போர்க்களத்துக்குப் போக எனக்குத் தைரியமாக அநுமதி கொடு!" என்றான்.



**சோஷலிஸ்டுகள் விரும்பாத சர்க்கார் உடைமை**

ஜனநாயக சோஷலிஸ நாடுகள் இன்று தொழிலகங்கள் அரசுடைமையாக்கப்படுவதை விரும்பவில்லை. காரணம், பல தொழிலகங்களை அரசுடைமையாக்கிய பின் ஏற்பட்ட அனுபவங்கள்தாம்.

(1) அரசுடைமையான தொழிலின் பணிகள் எல்லாருடைய காரியமுமாகி விட்டது. ஆகவே யாருமே எதையுமே சிரத்தையாகக் கவனிப்பதில்லை. திறமைக் குறைவு ஏற்பட்டது.

(2) அரசுடைமைத் தொழிலகம் மக்களுக்குச் சொந்தம் என்பதால் அதைப் பாராளுமன்றம் தன் கட்டுப்பாட்டுக்குள் வைக்கப் பார்த்தது. ஆனால் தொழிலகத்தின் அதிகாரிகள் நிறைவான நிர்வாகத்துக்குச் சுயாட்சி உரிமை வேண்டும் என்றனர். இதில் மோதல் ஏற்பட்டது.

(3) இதெல்லாவற்றையும் விட சோஷலிஸ்டுகளை மிகவும் கவலைக்குள்ளாக்கிய விஷயம், அரசாங்க அதிகாரிகள் பொருள்களை வாங்கி உபயோகிக்கும் மக்களின் தேவைகளையும் சரியாக உணரவில்லை, தமக்குக் கீழ் வேலை பார்க்கும் தொழிலாளர்களின் நலன்களையும் சரியாகக் கவனிக்கவில்லை என்பதே.

- சோஷலிஸ்ட் கமெண்டரி - (சுயராஜ்யா மலர் 1975)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இதற்கும் மங்கையர்க்கரசி மறுமொழி கூறாமல் மௌனமாய் நிற்கவே செம்பியன் வளவன் இன்னும் சொல்வான்:

"மகளே! நீ பால் மணம் மாறாத பச்சைக் குழந்தையாக இருந்த போது, ஒரு பெரியவர் நம் வீட்டுக்கு வந்தார். அவர் உன்னைப் பார்த்தார். உன் முகத்தை உற்றுப் பார்த்தார். உன் சின்னஞ் சிறு குஞ்சுக் கைகளைத் தூக்கிப் பார்த்தார். பார்த்துவிட்டு 'இந்தக் குழந்தையின் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது. இவள் பெரிய மண்டலாதிபதியின் பட்ட மகிஷியாவாள்!' என்று சொன்னார். அந்த வார்த்தைகள் என் செவிகளிலே இனிய தேனைப் போல் பாய்ந்தன. அன்றுமுதல் இன்றுவரை உன்னை மணக்கப்போகும் பாக்கியசாலியான இராஜ குமாரன் எப்போது வரப்போகிறான், எங்கிருந்து வரப் போகிறான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவனைத் தேடிக்கொண்டுதான் முக்கியமாக நான் இந்தக் காஞ்சி நகருக்கு வந்தேன்!"

மங்கையர்க்கரசி அப்போது அளவில்லாத பரபரப்புடன், "அப்பா! அப்பா! நேற்றிரவு நான் ஓர் அதிசயமான கனவு கண்டேன், அதைச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

(தொடரும்)

# விரோதிகள்

## சோம.மகாதேவன்

பின்னிரவு நேரத்தில் தெற்கு மூலையிலிருந்து கிழட்டு நாயொன்று இழுத்து ஊளையிடுவது, ஆழ்ந்திருந்த அமைதியில் அச்சத்தை ஊட்டி மெய்சிலிர்க்க வைக்கிறது.

அந்தக் கிராமமே பனிநீரில் குளிர்ந்து சலனமற்றிருக்கும்போது இரவின் ஆரம்பத்திலிருந்தே கண்ணுறக்கம் கொள்ளாது–படுக்கையில் புரண்டு கொண்டிருந்த மாசாணம், திடுக்கிட்டவனாக எழுந்து உட்கார்ந்து, தெற்கே உற்றுப் பார்க்கிறான்.

பெருகி வரும் குமுறலுக்கெல்லாம் இந்த நாயின் ஓலம்.... முத்தாய்ப்பு வைப்பது போலிருக்கிறது அவனுக்கு. வெறி கொண்ட நினைவுகளிலே மூழ்கிவிடும்போது, நெஞ்சிலும் சூடேறி விடுகிறதல்லவா? இந்தக் குளிர்ந்த நேரத்திலும், அவனது நெற்றியில் முத்து முத்தாக வியர்த்திருக்கிறது.

இடது கையில் மடியில் கிடந்த துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொள்ளுகிறான். அவனது பார்வை வலது தோளின் மீது தயங்குகிறது. அவனுக்கு வலது கை இல்லை. தோளுக்குக் கீழே பிடியளவுக்குத் தோல் சுருண்டு தொங்கியது.

நாய் மீண்டும் ஓலமிடுகிறது.

அவன் அந்தத் திசையை நோக்கி வெறித்துப் பார்க்கிறான்.

கடந்த இரண்டாண்டுகளாக ஒவ்வொரு நாளாக எண்ணி எண்ணிப் பொழுது விடியப் போகும் இந்த நேரத்தைக் கணித்து, கண் விழித்தல்லவா காத்துக் கொண்டிருக்கிறான்.

இடது கை வலது தோளைத் தடவிப் பார்த்துக் கொள்கிறது.

ஊனமில்லாமல் பிறந்து, கண்டோர் கதி கலங்கும் அளவுக்கு, இந்த ஊருக்குள்ளே வலம் வந்தவனே மாசாணம். இடையிலே விழுந்த வெட்டு கையோடு போய்விட்டது. சரிக்குச் சரியானதோர் ஆண்மகன் கையால் குட்டுப்பட்டிருந்தாலும் பரவாயில்லையே. கை நிறைய வளையல் அணிந்த பெண்ணொருத்தியல்லவா போட்டுவிட்டாள். அதன் பிறகு, மானம் இழந்து, மரியாதை கெட்டு...

பொங்கியெழும் கோபத்துடனே, துண்டை உதறித் தோளில் போட்டுக் கொள்ளுகிறான்.

இப்போது சகலத்துக்கும் இடது கைப் பழக்கம் என்பது அவனுக்குப் பழகியே விட்டது. சொல்லிச் சொல்லி வெட்டுவதற்கும் இந்த ஒரு கையே போதுமானது. பொழுது விடிய அவள் வரும்போது, மாசாணம் வைக்கும் குறி... தவறவே தவறாது! இனிமேலும் அவளைப் பெண்ணாகத்தான் நினைக்கலாமா?

மொட்டையாகி நிற்கும் தோளைத் தடவிப் பார்த்துக் கொள்ளும்போதெல்லாம் அவனது உடலெங்குமே சூடு பரவுகிறது.

அன்றைக்கும் இப்படி அதிகாலைப் பொழுதில்தான் அந்தச் சம்பவம் நடந்தது.

அந்த வருடம் நெல் பயிர் பொதிப் பருவத்தில் நிற்கும்போது, வாய்க்கால் தண்ணீருக்குத் தட்டுப்பாடு வந்து, இழுபறியாக இருந்தது. வலுத்தவன் வயலுக்கே தண்ணீர் பாயும். மாசாணம் அப்போது குட்டுப்படாத கெட்டிக்காரன். அவனுக்கு இரண்டு ஏக்கர் உழவடை இருந்தது. சவுடாலாகவே பேசிக் கொண்டு திரிவான்.

அன்றைக்குப் பொழுது புலர்ந்ததுமே தோளில் மண்வெட்டியோடு வயலுக்குச் சென்றவன் மாசாணம். அவனுக்கு முன்பாகவே, இருளாயி அங்கே வந்திருந்தாள்.

அவள் தகப்பன் முத்தனுக்குப் பக்கத்து வயலிலேதான் குத்தகை விவசாயம். முத்தனுக்குப் பக்கவாதம் — நடமாட்டம் இல்லை.

ஒரே மகள் இருளாயி. வயலில் பாடுபடுவதெல்லாம் இவளே. விவரம் அறிந்த பருவம் முதல் உழைத்து, உழைத்து உரமேறிய உடல். அவளது உருவத்தைப் போலவே அவள் மனசும் திடமானது. யாருக்கும் அஞ்சித் தலை குனியமாட்டாள்.

மாசாணத்தின் வயலுக்குப் பாய வேண்டிய தண்ணீரை மறித்துத் தன் வயலுக்குத் திருப்பிக் கொண்டிருந்தாள் இருளாயி.

செய்வதைச் செய்துவிட்டு ஆண் மகனைக் கண்டும் அலட்சியமாகத் திருப்பிக்கொண்டவளைப் பார்த்துக் கோபம் பொங்கி வந்தது அவனுக்கு.

''நீ பொண்ணுவா பிறந்திருக்கே...பிசாசு! போ அப்பாலே'' என்று அதட்டிவிட்டுக் குனிந்து தண்ணீரைத் தன் வயலுக்குத் திருப்பினான் மாசாணம்.

இருளாயி பொருமினாள்.

இந்தப் பயிர் விளைந்துதான் வயிற்றை நனைக்க இருக்கும் நிலையில் வயல் சுக்காக உலர்ந்து விரிவோடிக் கிடக்கும்போது கையைக் கட்டிக் கொண்டு நிற்க முடியுமா?

அவள் கெஞ்சினாள். அவன் திரும்பவில்லை. இளக்காரமாகப் பேசினான்.

அவனுக்கும் கோபம் வந்தது.

அவன் அடைத்து வந்த சேற்று வரப்பை மண்வெட்டியால் வெட்டி இழுத்தான்.

மாசாணத்துக்கு இது பொறுக்கவில்லை. ஆவேசத்தோடு வைதுகொண்டே எட்டி மிதித்து, மேட்டு வரப்பின் மீது அவளைத் தள்ளிவிட்டு, மீண்டும் குனிந்து தண்ணீரைத் தன் வயலுக்குத் திருப்பினான்.

ஊரான் பெற்ற மகளை, மறக்குடியில் பிறந்தவளை, கன்னி கழியாத பெண்ணை எட்டி உதைத்தால் அவளுக்கும் ரோசம் இருக்காதா? வரப்பின் மீது மல்லாந்து விழுந்தவள், அப்படிப் பெண் புலியாகச் சீறி எழுவாள் என்பதை மாசாணமும் எதிர்பார்க்கவில்லை. பெருக்கெடுத்த ஆவேசத்தில் எழுந்த வேகத்தோடு மண்வெட்டியுடன் ஓங்கின கைமாறாமல் போட்டுவிட்டாள் இருளாயி. அவனது தலைக்கு வைத்த குறியே தவறிப் போய், வலது தோள் பட்டையில் விழுந்து பூட்டு நொறுங்கியே போய்விட்டது. தலை தூக்காமல் கூக்குரலுடன் அப்படியே சுருண்டு விழுந்துவிட்டான், மாசாணம்.

மாசாணத்தைத மருத்துவ மனைக்குத் தூக்கிக் கொண்டு சென்றார்கள்.

இருளாயி கைது செய்யப்பட்டு வழக்கு நடந்தது. இரண்டாண்டுகள் கடுங்காவல் தண்டனை கிடைத்தது.

அவளுக்கு இது மட்டும் போதுமா?

நீண்ட பெருமூச்சு மாசாணத்தின் உடலை அசைக்கிறது.

ஒவ்வொரு நாளையும் அவன் எண்ணிக் கொண்டுதான் இருக்கிறான். அவள் என்றைக்கு வேலூரிலிருந்து விடுதலை பெற்று வெளியில் வருகிறாள் என்பதைத் தெரிந்து கொள்ள, அங்கேயே ஆள் வைத்திருந்து தகவலும் வந்து விட்டது. நேற்று முன்தினம் அவளை விடுதலை செய்து விட்டார்களாம்.

அவள் தகப்பன் முத்தப்பன் போன வருடமே செத்துப் போனாலும், குடியிருந்த மனையடி மிச்சம் இருக்கிறதே அவளுக்கு. இதை நினைத்து இங்கேதான் வந்து நிற்பாள்.

பெண்ணுருவில் இருக்கும் அந்தப் பேயை மண்ணிலே புரட்டி, இரத்தத்திலே துவட்டி எடுக்க வேண்டும். அதைக் கண்ணாறக் கண்ட பிறகே இந்த நெஞ்சு வேகும்.

எதிர் வீட்டின் கூரையிலிருந்து சேவல் கூவுகிறது.

மாசாணம் பரபரப்படைகிறான்.

விடியும்பொழுதில்தான் வடக்கிலிருந்து அந்த வண்டியும் வருகிறது. விடுதலையானதும் நேராகப் பிறந்த ஊருக்கே சீட்டுக் கொடுத்து அனுப்பி விடுவார்களாமே. நேற்று வரவில்லை. இன்றைக்கு எப்படியும் வந்து விடுவாள் அந்த நெஞ்சழுத்தக்காரி.

அவன் ஆயத்தமாகிறான்.

தலையணைக்கடியில் இருந்த தொங்கு பிடியோடு கூடிய அரிவாளை எடுத்து இடுப்பிலே செருகித் தொங்கவிட்டு, வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, ரயிலடியை நோக்கி நடக்கிறான், மாசாணம்.

வெகு தொலைவிலிருந்து தன்னைச் சுமந்து வந்த ரயில் சிவப்புப் புள்ளிகளாகத் தூரத்தில் ஓடி மறைவதையே பார்த்தவாறு நின்றிருந்தாள் அவள் — இருளாயி.

இரண்டாண்டுகளுக்கு முன்பாக முன்னும் பின்னும் காவலோடு, இதே இடத்திலிருந்து அவளை அழைத்துச் சென்றபோது, இங்கே ஊரே கூடி நின்றது. ஆனால் யாருமே இவளுக்காகப் பரிந்து பேச முன்வரவில்லை.

இந்த மண்ணில் காலடி வைத்தவுடனேயே அந்த நினைவெல்லாம் வந்து மோதுகிறது.

நான்கு சுவர்களுக்கு மத்தியிலிருந்து வெளிப்பட்டவுடன் இத்தனை அவசரத்தோடு யாருக்காக இங்கே ஓடி வந்து நிற்க வேண்டும்?

தர்மத்தின் பெயரால், ஊர் நாட்டாமை வேலூர் ஜெயிலுக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

போன வருடமே ஒப்புதலுக்கென்றிருந்த அப்பனையும் அனாதைப்பிணமாகவே கொண்டு போய்ச் சேர்த்து விட்டார்களாம். கட்டியழுவதற்கும் அங்கு யாருமே இல்லை. குடியிருந்த வீடும், கூரை இல்லாமல் குட்டிச்சுவராகத்தான் நிற்கும். ஆனாலும் பிறந்த மண்ணை விட்டு எங்கே போவது, எப்படிப் பிழைப்பது?

இருளாயி கையிலிருந்த துணிப் பையை நெஞ்சோடு அணைத்தவாறு ஊரை நோக்கி நடந்தாள்.

அப்பனும் செத்துப் போக, அந்தக் குத்தகை நிலத்தையும் மாசாணமே சேர்த்துக் கொண்டானாமே. இதுவும் எந்த நியாயத்தைச் சேர்ந்தது? நல்லது கெட்டதை எடுத்துச் சொல்ல இப்பவும் நாதி இல்லாமல் போனாலும், மறுபடியும் அடி தடிதான் என்றாலும் இருக்கவே இருக்கிறது வேலூரில் மனை






யடித்த சோறு. இந்த மண்ணிலே பெண்ணாகப் பிறந்து, தன்னந் தனியாகத் தவிப்பவளுக்கு அதைவிடப் பாதுகாப்பான இடம் வேறெங்கே இருக்கிறது?

நிலம் தெளிந்து வரும் பொழுதின் குளிர்ந்த தென்றலோடு நடந்து வந்தாள் இருளாயி.

அந்த ஊரை நினைக்கும்போது அவளுக்கு வெறுப்பாகவே இருக்கிறது. இருந்தாலும், இன்னமும் அங்கே என்ன பாக்கி யிருக்கிறதென்பதையும் பார்த்துவிட வேண்டாமா?

ஊருக்குள்ளே நுழையும்போது மாசாணத்தின் வீடுதான் முன்னால் இருக்கிறது. இந்த நேரத்தில் அவனும் திண்ணையில்தான் உட்கார்ந்திருப்பான். அந்தக் கொதிப்பும் அவனுக்கு இருக்கத்தான் செய்யும். கண்டவுடன் எழுந்து வந்து வழி மறித்து நிற்பானோ?

நிற்கட்டுமே. அப்படியும் பயந்து ஒதுங்கி வாழ முடியுமா?

இருளாயியின் நடையில் வேகமே கூடி வந்தது. கண்மாய்க்கரை ஒத்தையடித் தடத்திலிருந்து இறங்கி, வண்டிப் பாதையில் திரும்பி ஏறிட்டுப் பார்த்தபோது, அவளது கால்கள் தயங்கின.

நெஞ்சோடு அணைந்திருந்த பையைத் தடவிப் பார்த்துக் கொண்டாள் அவள். வெளியில் வந்ததுமே தேடிப் பிடித்து வாங்கி வந்திருந்த சூரிக் கத்தி உள்ளங்கையில் தட்டுப்பட்டது.

மூழ்கிக் குளித்துவிட்ட பிறகு முக்காடு தான் எதற்கு? இந்த உயிரையும் பிடித்து வைத்துக் கொள்வதற்குச் சொந்த பந்தமோ, சொத்துச் சுகமோ – என்ன இருக்கிறது?

அவள் நெருங்கி வருவதையே எதிர்நோக்கி நின்ற மாசாணம், சற்று முன்னுக்கு வந்து, பாதையின் மையத்திலே நின்றான்.

அவளும் அவனுக்கு முன்பாக வந்து, ஒதுங்கியே நின்று, கலக்கமில்லாமல் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

''உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கேன்'' என்றான் கரகரத்த குரலில்.

''எதுக்கு?''

''நம்ம ரெண்டு பேர் கணக்கையும் தீர்த்துக்கறதுக்கு'' என்றான் ஆங்காரத்தோடு.

''நானும் நினைச்சுத்தான் வந்திருக்கேன்.''

அவன் வெறியோடு சிரித்தான்.

''உன்னைப் பொண்ணு நினைச்சு மெத்தனமா குனிஞ்ச தலையிலே முத்திக்கிட்டே. இப்ப... பேய்ன்னு நினைச்சே தயாரா வந்திருக்கேன்?''

''மறக்காம பேய்ன்னாவது நினைச்சிருக்கியே!''

''மறக்கலே. என் நெஞ்சிலே விழுந்த வடு மாறலே. அதுக்கான நேரம்...இப்பத்தான் வந்திருக்கு'' என்று துடிப்புடன் சொன்ன மாசாணம் மடித்துக் கட்டியிருந்த வேட்டிக்குள்ளிருந்து அரிவாளை உருவி ''நினைச்சு நினைச்சு வெறியேறிப்போயிருக்கேன்'' என்றவாறு முன்னால் பாய்ந்து வந்தான்.

அவள் பின்னடைந்து கொண்டே பையினுள் கையை விட்டுச் சூரிக் கத்தியை எடுத்தாள். ''நான் செத்தாலும் உன்னை விட்டுட்டும் போக மாட்டேன். இதையும் திண்ணமா நினைச்சுக்கோ'' என்றவள் துணிப் பையைச் சுருட்டிக் கேடயம் போல் பிடித்துக் கொண்டாள்.

கோபத்தினால் அவனது உடலே குலுங்கியது. ''ஆமா...இப்ப...என்னோட முறை வந்திருக்கு'' என்று ஆங்காரத்தோடு கூவிக் கொண்டே அரிவாளால் எட்டி வீசினான்.

அப்போது சுழற்றியடித்த காற்றிலே, தோளோடு சுற்றியிருந்த அவளது மேல் துண்டு கீழே விழுந்தது.

அவனது வெட்டுக்குப் பதுங்கி, தலை நிமிர்ந்தவளின் பார்வை அவனது வலது தோளின் மீது பதிந்தது.

சிகிச்சையின் இரண்டாவது கட்டமாக அவனது வலது கையே துண்டிக்கப்பட்டது. இதுகாறும் அவளுக்குத் தெரியவே தெரியாது. ஒரு கையே போய்விட்டதா?

''பாரு... குறைவில்லாமல் பிறந்தவனை ஊனப்பட வைச்சியே. இதைப் பாக்குறப்ப என் நெஞ்சு கொதிக்குது'' என்று ஆவேசத்தோடு அரிவாளை ஓங்கினான் அவன்.

அவள் பின்னால் நகர்ந்தாள். அவளது பார்வை...அந்த மொண்ணைக் கையின் மீதே படிந்திருந்தது. முழுசாக இருந்தவனுக்கு ஒரு கையே போய்விட்டதா?

''இப்ப... நீயோ – நானோ அழிஞ்சு போறதுக்கு முன்னாலே நானொன்னு சொல்றேன் கேட்குறியா?'' என்று கேட்டாள்.

''கருண்டு விழப்போற நேரத்திலே சொல்றதுக்கு என்ன இருக்கு?'' என்று உறுமினான்.

''அப்படியேதான் வைச்சுக்கோ. கடைசியா மனசிலே படுறதைச் சொல்றேன். நீ... கையில்லாம நிக்கறதைப் பாக்குறப்ப எனக்குக் கலக்கமா இருக்கு'' என்றாள் அவள்.

ஓங்கிய கை மாறுமுன்பே அவளது முகத்தைப் பார்த்தான் மாசாணம்.

''மனம் விட்டுச் சொல்றேன் கேளு. நான் செஞ்ச பாவத்துக்குப் பரிகாரமா எப்பவும் உங்கூடவே இருக்கேன். ஒரு கைக்குப் பதிலா...என்னோட ரெண்டு கைகளும் இருக்கு. என்னைக் கொன்னுட்டா உனக்குக் கை வந்திருமா? அப்படித்தான் பழி தீரணும்னு இருந்தா என்னை வெட்டிப் போடு. எனக்கும்தான் வேறே என்ன இருக்கு'' என்று சொல்லியபடி கையிலிருந்த கத்தியையும் அவனுக்கு முன்னால் எறிந்தாள்.

மாசாணம் அவளையே இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தான். இருளாயியின் கண்கள் இப்படியும் கலங்குமா? அவள் நெஞ்சிலும் இப்படியோர் ஈரம் இருந்ததா?

பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவனது விழிகளும் நீரில் மூழ்கின. கையிலிருந்த அரிவாள் நழுவி, கத்தியின் மீது விழுந்தது!

# கரும்பு நசுக்க இரும்பு ஆலை எதற்கு ?



## கட்டமைந்த பற்களின் வலிமை:
## கால்ஷியம் ஸாண்டோஸ் மகிமை!



பற்களுக்கும் எலும்புகளுக்கும், பெரியவர்களை விட இருமடங்கு கால்ஷியம் குழந்தைகளுக்குத் தேவை. உங்கள் குழந்தைக்குக் கொடுங்கள் ராஸ்ப்பெர்ரி இன்சுவையுள்ள கால்ஷியம் ஸாண்டோஸ்.

நாளொன்றுக்கு 4-6 வில்லைகளே போதும்—பற்களுக்கு நலம், எலும்புகளுக்கு பலம்; தவிர உடம்புக்கு வைட்டமின்கள் C, D, $B_{12}$.

200 மற்றும் 50 வில்லைகள் அடங்கிய புட்டிகளிலும், தவிர ஸிரப் வடிவிலும் வருகிறது.

**கால்ஷியம் ஸாண்டோஸ்®**

**தினமும் தேவை எவருக்கும்**




### வளர்ச்சிக்கு கால்ஷியம்

4 மாத காலம் கால்ஷியம் சாப்பிட்ட குழந்தைகள், சாப்பிடாதவர்களை விட வேகமாக வளர்ந்ததாக விஞ்ஞானப் பரிசோதனைகள் நிரூபிக்கின்றன.



எல்லா முக்கிய மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

dCP/CS/71. Tam

# இந்தியாவில் தயாரிக்கப்பட்டது அகில உலகுக்காக... உங்களுக்காகவும்.

FRANCE

SPAIN

MW SW

புதிய

## பிரின்ஸ் டீலக்ஸ் 4 இந்தியாவிலேயே அதிக விற்பனையுள்ள டிரான்ஸிஸ்டரின் ஏற்றுமதித் தரமுள்ள மிகச் சிறந்த மாடல்...

புதிய பிரின்ஸைக் கேட்டுப் பார்த்தீர்களா? அகில உலக நேயர்களைப் பிடிக்கும் இந்த இந்திய போர்ட்டபிள் டிரான்ஸிஸ்டருக்கு வெளி நாடுகளில் ஏன் இவ்வளவு கிராக்கி என்பது புரியும். வெளிநாட்டினர் போற்றும்படி பிரின்ஸ் டிரான்ஸிஸ்டரின் சிறப்புகள் என்ன? நீங்கள் விரும்பும் ஒலியைத் தேர்ந்தெடுக்கவும், ஒலியின் வெவ்வேறு தரங்களைப் பெறவும், விசேஷ ஐ.எஃப். சர்க்கியூட் உள்ளது. கூடவே, நம்பகமான ஸாலிட்-ஸ்டேட் சாதனத்தின் சக்தி. உயர் திறன் படைத்த 10 செ.மீ. ஆழமுள்ள ஸ்பீக்கர். அதிக நீடித்த, தூய செப்பு ஏரியல். 700 மி.வா-க்கும் அதிகமான கேட்கும் சக்தி. பாட்டரியின் சக்தி (வோல்டேஜ்) குறைவாக உள்ளபோதும், உரக்க, தெளிவாகக் கேட்க டயோடு. இவை மட்டுமா? இதன் பெயருக்கேற்றபடி அலங்காரமான அழகிய தோற்றம்.

இன்றே பிரின்ஸ் டிரான்ஸிஸ்டர் வாங்கி மகிழுங்கள். உலகெங்கிலுமுள்ள தரமறிந்த நேயர்கள் இதைத்தான் செய்கிறார்கள்

## பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

**எதை வாங்கினாலும் சிறந்ததையே வாங்குங்கள்.**

CMPB-318-165 TH



# பாய்லர் தொழிற்சாலைக்குப் பத்து வயது!

மே மாதம் முதல் தேதி.

மேதினம் — தொழிலாளர் திருநாள்.

திருவெறும்பூர் அன்று திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. தொழிலாளர்கள் உவகையும் உற்சாகமும் பொங்க எறும்பூர் என்ற பெயருக்கேற்ப எறும்புகளைப் போலவே சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்தார்கள். சோழர்களின் தலைநகரமான உறையூரின் அருகிலே உள்ள திருச்சி சரித்திரப் புகழ் பெற்ற ஊர். புராணப் புகழும் சிராப்பள்ளிக்கு உண்டு. குன்றுடையானைக் கொண்ட மலைக்கோட்டை கல்விக் கோட்டை என்று புகழ்பெற்றதும் கூட. அதையெல்லாம் விடச் சமீப காலமாகத் தொழில் வளம் நிறைந்த ஊராகவும் மாறிக் கொண்டிருக்கிறது திருச்சி. பத்து ஆண்டுகளுக்கு முன்பு திருச்சியிலிருந்து எட்டுக் கல் தொலைவிலுள்ள திருவெறும்பூரில் பாரத் கனரக மின்சார லிமிடெட் என்றதொரு ஸ்தாபனம் தோன்றியது. உச்ச அழுத்தக் கொதிகலன்களை உற்பத்தி செய்வதற்காக நிறுவப்பட்ட தொழிற்சாலை இது. ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்குப் பல தொழிற்சாலைகள் தோன்றியாக வேண்டும். தொழிற்சாலை என்றால் அதற்குக் கொதிகலன்களும் பல்வேறு வகையான வால்வுகளும் தேவை. மின் நிலையங்கள் நாட்டின் நரம்புகள். இந்த மின் நிலையங்களுக்குப் பாய்லர்கள் இல்லாமல் முடியாது. நாட்டிலுள்ள பலவகைப்பட்ட தொழிற்சாலைகளுக்குத் தேவையான பாய்லர்களைப் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் நிறுவனம் செய்து குவிக்கிறது. அயல் நாட்டவர்களும் 'பிஹெச்இஎல்'லின் தரம் உணர்ந்து தங்களுக்குத் தேவையான பாய்லர்களுக்கு ஆர்டர் கொடுக்கிறார்கள். பொதுத் துறையில் நல்ல லாபகரமாகச் செயல்படும் ஒருசில நிறுவனங்களுள் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் ஸ்தாபனமும் ஒன்று. ஏராளமான அந்நியச் செலாவணியை அள்ளிக் குவித்துக் கொண்டிருக்கிறது.

1965ல் முன்னாள் ஜனாதிபதி ஜாகிர் ஹுசைன் அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது இங்குள்ள உச்ச அழுத்த பாய்லர் பிளாண்ட். பாய்லர் தொழில் சம்பந்தமான சிறப்பு அம்சங்கள் உலகில் எந்த நாட்டில், எந்த அமைப்பில் இருந்தாலும் அதைத் தங்கள் நிறுவனத்துக்குப் பயன் தரும் வகையில் அந்த நாட்டுடன் தொழில் முறை ஒப்பந்தம் செய்துகொண்டு பாரத் கனரக மின்சாரத் தொழிற்சாலையை மகத்தான முறையில் வளர்த்திருக்கிறார்கள். செக்கோஸ்லோவேகியா, அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான், மேற்கு ஜெர்மனி, ஸ்வீடன் இந்த நாட்டுத் தொழில் நுணுக்க உதவியோடு பிரமிக்கத் தக்க முறையில் வளர்ந்துள்ளது இந்த ஸ்தாபனம். பாரதத்தில் 'பிஹெச்இஎல்' அமைப்புக்கள் பல உள்ளன.

மேலே: ○ புதிய கட்டடத்தின் தோற்றம். ○ புதிய கட்டடத்தைத் திறந்து வைத்த திரு எம். சோந்தி. ○ திருச்சி யூனிட்டின் ஜெனரல் மானேஜர் திரு வி. ஆர். நிளதயாளு

வலப்பக்கம்: ○ உழைப்பு ஒற்றுமையை விளக்கும் நவீன பாணி சிற்பத்தைத் திறந்து வைக்கிறார் பாரத் கனரக மின்சார லிமிடெட்டின் அக்ராசனரும் நிர்வாக டைரக்டருமான திரு வி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

திருச்சியில் உள்ள அமைப்பின் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர் திருவாரூர் தேரை ஓட வைத்த திரு கிருஷ்ணமூர்த்திதான் என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இன்று இவர் 'பிஹெச்இஎல்' அமைப்புக்களின் அக்ராசனராகவும், நிர்வாக டைரக்டராகவும் பதவி உயர்வு பெற்று டெல்லிக்குச் சென்று விட்டாலும் தம்மால் செழுமையாக வளர்க்கப்பட்ட ஸ்தாபனம் தமது பத்தாண்டு நிறைவு விழாவைக் கொண்டாடும் தருணத்தில் அந்த மகிழ்ச்சியில் தொழிலாளர்களோடு கலந்துகொள்ள வருகை தந்தார்.

தொழிலாளர்கள் தங்கள் உழைப்பின் வெற்றியைக் கொண்டாடும் மே தினத்தில் 'பிஹெச்இஎல்' தனது பத்தாண்டு நிறைவைக் கொண்டாடி மகிழ்ந்தது பொருத்தமாக இருந்தது. தொழிலாளர்களுடைய ஒத்துழைப்பின் சிகரமாக அந்த விழா அமைந்திருந்தது. பத்து வருடங்களைக் குறிக்கவும் ஒற்றுமையை விளக்கவும் இரு கைகள் இணைந்து குவிந்திருப்பது போன்ற ஒரு நவீன பாணி சிற்பத்தைத் தொழிற்பேட்டையின் குடியிருப்புப் பகுதியின் முகப்பில் நிறுவி அதை அன்று திறந்து வைத்தார்கள். அந்தச் சிற்பத்தை உருவாக்கியவர் கலிய பெருமாள் என்ற தொழிலாளி. அதற்காக அவருக்கு ஐந்நூறு ரூபாய் பரிசளிக்கப்பட்டது. அதுமட்டுமல்ல; அன்று பத்து ஆண்டுகளாகப் பணி புரிந்து வரும் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்களுக்கு 'ஹெச். எம். டி.' கைக் கெடிகாரமும் பரிசளிக்கப்பட்டது. மத்திய அரசு தொழில் சிவில் சப்ளை இலாகா காரியதரிசி திரு எம். சோந்தி அவர்கள் 'பிஹெச்இஎல்' நிறுவனத்தின் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் பாராட்டித் தொழிலாளர்களுக்குக் கைக் கடிகாரங்களைப் பரிசளித்தார். உழைப்பையும் ஒற்றுமையையும் விளக்கும் நவீன பாணி சிற்பத்தைத் திறந்து வைத்தவர் பாரத் கனரக மின்சார லிமிடெட்டின் அக்ராசனரும் நிர்வாக டைரக்டருமான திரு கிருஷ்மூர்த்தி அவர்கள். திருச்சி நிலையத்தின் இன்றைய நிர்வாகியான திரு தினதயாளு அவர்கள் எல்லோரையும் வரவேற்றார். அதற்கு முன் தினம் தொழிற்கூடத்தில் ஆராய்ச்சி மற்றும் முன்னேற்றத்துக்கான ஒரு பிரிவை (Research and Development Complex) திரு சோந்தி அவர்கள் திறந்து வைத்தார்.

'பிஹெச்இஎல்' இன்னும் எப்படியெல்லாம் வளர்ச்சியடையத் திட்டமிடப்பட்டிருக்கிறது என்பதை அன்று திரு தினதயாளு அவர்களும் திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களும் விளக்கினார்கள். பெட்ரோல் எண்ணெய் பற்றாக்குறை ஏற்பட்டுள்ள இந்தச் சமயத்தில் பெட்ரோல் மூலம் சக்தி பெறும் தொழிற்சாலையிலுள்ள கலன்களுக்கு நிலக்கரியைப் பயன்படுத்திச் சக்தி பெறுவதற்கு ஏற்ற வகையில் கொதி கலன்களை உருவாக்குவதில் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள் இங்கே. அணுசக்தியை ஆக்கப் பணிகளுக்குப் பயன்படுத்தும் முக்கியமான கட்டத்தில் பாரதம் சென்றுகொண்டிருக்கிறது. இதற்குத் தேவையான கொதி கலன்களைத் தயாரிக்கும் பொறுப்பை 'பிஹெச்இஎல்' தான் ஏற்கவேண்டியிருக்கும். ஆகவே பாரதம் பெருமை கொள்ளத் தகுந்த ஒரு நிறுவனம் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் என்பதில் சந்தேகமே இல்லை. நாட்டிலுள்ள அனல் மின்நிலையம், அணுமின் நிலையங்களுக்குத் தேவையான கொதி கலன்களையும் தொழிற்கூடங்களுக்கு வேண்டிய பல்வேறு வகைப் பாய்லர்களையும் வால்வுகளையும் செய்து குவிக்கும் இந்த ஸ்தாபனத்தின் தொழிலாளர்கள் மகிழ்ச்சியோடும் மன நிறைவோடும் பணியாற்றுகிறார்கள். அவர்களுடைய நல்வாழ்வை அக்கறையுடன் இத்தொழில் ஸ்தாபனம் கவனிக்கிறது என்பதைத் திருவெறும்பூரிலுள்ள பிரும்மாண்டமான சகல வசதிகளுடன் கூடிய தொழிலாளர் குடியிருப்புக்களே சொல்லுகின்றன. நாட்டின் வளம் பெருக்கும் தொழிற் கூடங்கள் சிறப்பாக இயங்கத் தொழிலாளர்களின் நலனும் நல் வாழ்வும் பராமரிக்கப்பட வேண்டும். அதில் 'பிஹெச்இஎல்' முன்னோடியாக இருப்பதில் பெருமை கொள்ளலாம்.

— கௌசிகன்

---




## ''ஸிங்க் பிளேட்'' செய்யும் யூனியன் கார்பைட்

அச்சுத் தொழிலில், மிக முக்கியமான அங்கம் பிளாக்குகள். இந்தப் பிளாக்குகள் ஸிங்க் தகடுகளில் செய்யப்படுகின்றன. இந்த ஸிங்க் தகடுகள் உற்பத்தி செய்யும் கல்கத்தா யூனியன் கார்பைட் கம்பெனியார் தங்கள் ஸிங்க் பிளேட்டை வாங்கி உபயோகிக்கும், தென்னாட்டில் பிளாக்குகள் செய்யும் தொழில் பிரமுகர்களைச் சந்தித்து அவர்கள் அனுபவங்களைக் கேட்டறிய ஏப்ரல் 26ம் தேதி கன்னிமாரா ஹோட்டலில் ஒரு மகாநாடு ஏற்பாடு செய்திருந்தனர். கல்கத்தாவிலிருந்து இம்மகாநாட்டுக்கு வந்திருந்த யூனியன் கார்பைட் மானேஜர், டாக்டர் எஸ். கே. பட்டாச்சார்ஜி, உற்பத்தியிலுள்ள சங்கடங்களையும் மூலப் பொருள் இறக்குமதியில் ஏற்படும் தொல்லைகளையும் விளக்கினார். எனினும் வருகிற மாதங்களில் ஸிங்க் பிளேட் உற்பத்தி சிறப்பாக இருக்கும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்தார்.

# ATTENTION: Textile, Hosiery, Jute and Paper Mills!



This New Ennor

## HYDRAULIC BALING PRESS

**can solve your storage space and transportation problems of Cotton, Banian and other textile wastes; Paper wastes and wood wool; Jute and Coir fibre.**

Now there is no need to pile them up in heaps wasting a voluminous space of your precious factory premises. Our ENNOR Baling Press can pack them up into neat bundles. You can save on storage space and on transportation cost too!

This easy-to-operate Hydraulic Baling Press with its built-in quality costs much less than you think! It is capable of making 50 60 bundles in 8 hrs. We can also supply to suit your specifications.

For further details please contact :

**BHARAT MOTORS**

5. Greames Road, Madras-600006

Phone : 86203 4 Grams : Bharatcars

adsindia

## 43. சிவகாமியின் ஜதிகள்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



**கற்பனை அரங்கில் பொற்கொடிப்பாவை அற்புத நடனம் ஆடிட வந்தாள்**

ரசிகேடான நாவல்கள் மீது கல்கி வீசிய கடுஞ்சொற்களை முன்னேர் அத்தியாயத்தில் பார்த்தோம். 1933 மத்தியில் நடந்தது அந்தத் தாக்குதல். கெட்ட நாவல்களை அப்படித் தாக்கியதோடு கல்கி நிற்காமல், நல்ல நாவல்களைத் தோற்றுவிப்பதற்காக, அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் ஆயிரம் ரூபாய் பரிசு கொண்ட நாவல் போட்டி ஒன்றை, வாசனின் ஆமோதிப்புடன் ஆனந்த விகடனில் அறிவித்தார். தமிழ் நாட்டில் முதல் பெரும் இலக்கியப் போட்டியான அதில் ''சுகப்ரியை'' (ஸ்வர்ணம்பாள்) எழுதிய ''சந்திரிகா'' என்ற சமூக நாவலும், வெங்கடாசலம் எழுதிய ''மஞ்சுளா'' என்ற சரித்திர நாவலும் பரிசுக்குப் பகிர்வாய் உரித்தாயின.

சுகப்ரியையின் நாவல்தொடர் கதையாய் ஓடிப் பின்னர் புத்தகமாய் வந்தபோது, அதற்கு எழுதிய முன்னுரையில் கல்கி, அதன் கதை வாழ்க்கையுடன் ஒட்டியதாயும் நடை உயிருள்ளதாயும் இருப்பதைப் பாராட்டினார். அதே முன்னுரையில் அவர், போட்டிக்கு வந்த மற்றக் கதைகளில் பெரும்பாலானவை எவ்வாறு ''ஸ்திரீ புருஷ சோரங்கள், சிருங்கார பயங்கரங்கள், சித்திர வதைகள்'' முதலியன நிறைந்த அசிங்கக் குப்பைகளாய் இருந்தன என்பதைக் கேலியாகவும் வருத்தத்துடனும் குறிப்பிட்டார்.

பொதுவாக நாவல் என்றாலே ஆபாசம் என்பதாய் இருந்த காலம் அது. நாவலைப் பிடித்த ஆபாசம், திரைப் படங்கள் தோன்றிப் பெருகியபோது, அவற்றையும் பற்றிக் கொண்டது. அந்தப் பீடையையும் கல்கி தாக்கலானார்:

தமிழ் மக்கள் ரஸாநுபவத்தில் மேன்மை அடைந்து வருவது உண்மையானால், தமிழ் டாக்கிகளில் மேலும் மேலும் அதிகமான ஆபாஸத்தை ஏன் புகுத்துகிறார்கள்? ஆமாம்; ''புகுத்துகிறார்கள்'' என்பதுதான் சரியான வார்த்தை. வேண்டுமென்று கொண்டு வந்து சேர்க்கிறார்களே, அதைத்தான் இங்கே குறிப்பிடுகிறேன். சில கதைகள் தம்மிலேயே ஆபாஸக் களஞ்சியங்களாக இருக்கின்றன. அவைகளை விட்டுவிடுவோம். ஆனால் நல்ல கதைகளில் வேண்டுமென்று ஆபாஸங்களைக் கொண்டு வந்து சேர்ப்பதேன்? உதாரணமாக, ருக்மாங்கதனுடைய புனித சரித்திரத்தில் தாஸி வீட்டை ஏன் கொண்டு வருகிறார்கள்? ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் புண்ணிய கதையில் குல ஸ்திரீயைக் கெடுக்க முயற்சி செய்யும் ரேகை சாஸ்திரி எதற்காக வருகிறான்? நந்தனுடைய பக்திமயமான ஜீவியத்தில், வேதியரின் குமாஸ்தாவும் பரிசாரகனும் செய்யும் விபசாரம் ஏன் வந்து தோன்றுகிறது?

''ஜனங்களுக்குப் பிடிக்கும்'' என்று தமிழ் டாக்கிக்காரர்கள் நம்புவதுதான் காரணமாயிருக்க வேண்டும். அப்படி அவர்கள் நினைப்பது பெரியதொரு தவறு.

(ஆனந்த விகடன் 8-12-35)

நாவல்களும் திரைப் படங்களும் அவ்விதக் கேவலமான நிலைமையில் இருந்த சமயத்தில் அந்த நிலைமையை மாற்றி, நல்ல கதைகளை சினிமாவுக்கு ஏற்றதாய் எழுத வேண்டும். அவற்றில் சுவைக் கேடுகள் புகாமல் பாதுகாக்க வேண்டும் என்று கல்கி தீர்மானித்தார். அந்தத் தீர்மானத்தின் பலனே முத்தையன் கதையும் சிவகாமியின் கதையும். உடன் காலத்துக் கதை ஒன்றையும், பண்டையப் பல்லவர் காலத்துக் கதை ஒன்றையும் மூல வடிவில் ஒரே சமயத்தில் அவர் உருவாக்கினார். அவருடைய இலக்கிய வாழ்க்கையில் அது ஒரு சுவையான, சிறப்பான கட்டம்.

1935 பிற்பாதி பாதங்களில் ''கல்கி' பெயரிட்ட கதை, கட்டுரைகள் ஏதும் ஆனந்த விகடன் இதழ்களில் வெளியாகவில்லை. ஏன் என்று விசாரித்துக் கொழும்பு வாசகர் ஒருவர் கடிதம் எழுதிக் கேட்டார். அவருடைய கடிதம் 8—12—35 இதழில் பிரசுரமாயிற்று. அதற்கான பதிலும் அதன் அடியில் கல்கியின் ஒப்பத்துடனேயே வெளியாயிற்று.





...டாக்கி எடுப்பதற்குரிய சிறந்த இரண்டு கதைகள் எழுத வேண்டும் என்று தீர்மானித்து அந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறேன். ஒரு கதை எழுதித் தயாராகிவிட்டது. இன்னொன்று தயாராகி வருகிறது. டாக்கிக்குக் கதை எழுதுவது மிகவும் பிரயாசையான வேலை என்பதை நான் உணர்ந்திருப்பதால், அதில் பூரண கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. மேற்படி வேலையின் முக்கியத்தை முன்னிட்டு, விகடனுக்கு அடிக்கடி எழுதாதன் பொருட்டு நேயர்கள் மன்னிப்பார்கள் என்று நம்புகிறேன்.

இன்னொரு விஷயம். ''கதை தயாராய் விட்டதென் கிறீரே, டாக்கி எங்கே?'' என்று கேட்காதீர்கள். கதை தயார் என்றால் பாதிக் கல்யாணம்கூட ஆகவில்லை; கால் கல்யாணந்தான் ஆயிற்று! தகுந்த நடிகர்கள் முதலிய எல்லா வசதிகளும் கிடைத்தால்தான் டாக்கி வெளிவரும்.



இரண்டு கதைகளையும் எழுதி முடித்ததும், ரசிகர் குழாம் ஒன்றில் அவற்றைக் கல்கி வாசித்துக் காட்டினார். கி. சந்திரசேகரனின் வீட்டில் கூடிய அந்தக் குழாத்தில் இருந்தவர்கள்: ரசிகமணி டி. கே. சி.; அப்போது ராஜதானிக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராய் இருந்தவரும், அடுத்தடுத்து கல்கியின் இரண்டு பாராட்டு விமரிசனங்களுக்கு உரித்தான ''கட்டை வண்டி'' என்ற பாடல் நாடகம் ஒன்றை இயற்றி நடத்தியவருமான கே. சுவாமிநாதன்;

1. கடலோரத் தலம் ஒன்றில் எழுந்தது அந்தக் காட்சி.

2-3. சிவகாமியின் பாகத்துக்கு ஏற்றவர் அப்போது ஓங்குபுகழுடன் விளங்கிய பாலசரஸ்வதி அல்லது ருக்மிணிதேவி எனக்கல்கி கருதினர்.

4. சிவகாமி - மணியம் கல்கியில் முன்பு வரைந்த படங்கள்.







''ஹரிஜன்'' சாஸ்திரி தம்பதியர்; சந்திரசேகரனின் சகோதரியும் இலக்கிய ரசிகரும் எழுத்தாளருமான சாவித்திரி அம்மாள்.

வாசிப்பு நாலைந்து நாட்கள் நடந்தது என்றும் எழுத்துத் திறமைக்கு ஒப்பாக எழுதியதை நேர்த்தியாகப் படித்துக் காட்டும் ஆற்றலும் கொண்டவர் கல்கி என்பது அப்போது புலனாயிற்று என்றும் சந்திரசேகரன் சொல்கிறார். ''இரண்டுமே சிறப்பான கதைகள்தான் என்றாலும், கள்வனின் காதலிதான் திரைப் படத்துக்கு வாய்ப்பானது'' என்பதாக வாசிப்பின் இறுதியில் அந்த இலக்கிய நண்பர்கள் கருத்துத் தெரிவித்தார்கள்.

முத்தையனை நடிப்பதற்கு அந்தக் காலத்து நடிகர்களில் யார் யாரைக் கல்கி கருதிப் பார்த்தாரோ தெரியாது. ஆனால் சிவகாமியின் பாத்திரத்துக்கு ஏற்றவர் அப்போது ஓங்கு புகழுடன் விளங்கிய பாலசரஸ்வதி அல்லது ருக்மிணி தேவி எனக் கல்கி கருதினார். அவர்களை அதை ஏற்கும்படி செய்யக் கல்கி முயன்றாராம். சினிமாவில் நடிக்க விரும்பவில்லை என்று சொல்லி இருவருமே மறுத்து விட்டார்களாம்.

சுமார் இரண்டாண்டு காலம் காத்திருந்து ''கள்வனின் காதலி'' திரைப் படமாய் வரப்போவதில்லை என்பதைக் கல்கி உணர்ந்ததும், அதை ஒரு நாவலாய் விரிவுபடுத்தி எழுதி, ஆனந்த விகடன் 29—8—37 இதழிலிருந்து வர்மாவின் சித்திரங்களுடன் வெளியிட்டார். அது வெளியாவதற்கு முன்னால் அதை ''டாக்கிக் கதை'' என்றே அறிவித்திருந்தார். எச்சரிக்கை நிமித்தமான அந்த வர்ணனை அனாவசியமானது. அதை உணர்ந்தாற்போல் கல்கி, இருபத்தைந்து இதழ்களில் தொடர் ஓடிய பிறகு, ''உபயகுசலோபரி'' பத்தியில் குறிப்பு ஒன்றை வெளியிட்டார்.

தேர்தலுக்கு நிற்பவர்கள் ''நண்பர்கள் பலருடைய வற்புறுத்தலை முன்னிட்டு அபேட்சகனாக நிற்க முன்வந்திருக்கிறேன்'' என்று தங்கள் தேர்தல் விண்ணப்பத்தில் குறிப்பிடுவது வழக்கம். ஆனால் சில சமயம் நிஜமாகவே அம்மாதிரி நண்பர்கள் வற்புறுத்துவதும் நடக்கக் கூடியதே அல்லவா?

''கள்வனின் காதலி''யைத் தொடர் கதையாக விகடனில் வெளியிட்ட விஷயத்தில் நண்பர்களுடைய வற்புறுத்தல் உண்மையாகவே நடந்த விஷயம். அந்த வற்புறுத்தல் இல்லாவிட்டால் கதை இந்த ரூபத்தில் வெளியாகி இராது.

''கள்வனின் காதலி'' டாக்கித் திரைக் கதையாகக் கற்பனை செய்த கதையாகையால், அது நாவல் உருவத்தில் நன்றாயிருக்குமா என்பதைப் பற்றி எனக்குப் பெரிதும் சந்தேகம் இருந்தது. சில விஷயங்கள், சில சம்பவங்கள், சில காட்சிகள் — திரையில் பார்க்கத்தான் நன்றாயிருக்கும்; படிப்பதற்கு அவ்வளவாய் ரஸப்படாது... ஆகையினாலே, ''கள்வனின் காதலி'''யைத் தொடர்கதையாய் எழுதினால் எப்படியிருக்குமோ என்பதைப் பற்றிச் சந்தேகம் இருந்தது. 'சில அத்தியாயங்கள் வெளியான பிறகு, நேயர்கள் கடிதப் போக்கில் காட்டிய ஆர்வத்தைக் கண்டதும் அந்தச் சந்தேகம் எல்லாம் நீங்கிப் போயிற்று. (ஆனந்த விகடன் 13-3-38)

''கள்வனின் காதலி'' திரைக் கதையை விரைவிலேயே நாவலாக மாற்றி வெளியிட்ட கல்கி, ''சிவகாமியின் சபதம்'' திரைக் கதையையோ, பல ஆண்டுகளுக்குப் பிறகுதான் நாவல் வடிவில் ஆக்கி வெளியிட்டார். ''ஏறக்குறைய பன்னிரண்டு வருஷ காலம் (இந்தக் கதையை) என் உள்ளத்தில் தாங்கிக் கொண்டிருந்தேன்'' என்று ''சிவகாமியின் சபதம்'' நாவலின் முன்னுரையில் கல்கி சொல்லி இருப்பது மிகைக் கூற்று அல்ல. அந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலமும் அவர் படைப்புக் களிப்பையும் படைப்பு வேதனையையும் மாறி மாறி அனுபவித்துக் கொண்டிருந்தார். ''இன்ப வேதனை'' என்று அவரே அடிக்கடி வர்ணித்துச் சொல்லும் கலம்பக உணர்ச்சிக்கு உள்ளாகியிருந்தார். அந்தக் கதையின் மாந்தரையும், காட்சிகளையும், நிகழ்ச்சிகளையும், உரையாடல்களையும் மனத்திலும் தாளிலும் தோற்றுவித்துக் கொண்டும், தோற்றுவித்ததை மாற்றிக் கொண்டும், மெருகிட்டுக் கொண்டும் இருந்தார். ஆரம்பக் கதை வடிவுக்கும் இறுதி நாவல் வடிவுக்கும் எவ்வளவோ வேற்றுமைகள். எவ்வளவு என்று ஒப்பிட்டுப் பார்த்துக் கணிக்க முதல் வடிவம் இல்லை. ஆனாலும், தெரிந்த ஒரு வேற்றுமையைக் கொண்டு ஒருவாறு அதை ஊகிக்கலாம்.

''சிவகாமியின் சபதம்'' ஒரு தொடர் கதையாய்க் கல்கியில் வெளிவருவதற்கு முன்னால், 21—5—41ம் தேதியில் திருச்சி வானொலி நிலையத்திலிருந்து ஒரு நாடகமாய் ஒலிபரப்பாயிற்று. அதற்காகக் கல்கி கையெழுத்து வடிவில் அனுப்பிய கதையில் ''நெஞ்சிலும் நாவிலும் நஞ்சுடைய'' நாகநந்தி இல்லை. ''விஷ மூலிகைகளை அருந்தி உடம்பையே விஷமாகச் செய்துகொண்ட'' அந்தப் பிக்ஷு இல்லாததால், அவருடைய கொடிய ஆசைகளும் அவற்றால் விளைந்த, கொடிய வினைகளும் இல்லை; அவ

# உங்கள் குடும்பத்திற்கு ஏற்றது மிகச்சிறந்ததே!




## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் வித்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

வெண்மையான பற்களையும் ஆரோக்கியமான ஈறுகளையும் தூய்மையான இனிய மூச்சையும் பெற்றிடவே **கால்கேட் டூத் பிரஷ்களை** உபயோகியுங்கள்! உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு அமைப்—16 ரகங்கள்.

ருடைய வஞ்சகச் சூழ்ச்சிகளும் அவற்றால் விளைந்த பயங்கர நிகழ்ச்சிகளும் இல்லை; இன்னும் எத்தனையோ மர்மங்களும், மடக்குகளும், மாறுாட்டங்களும் இல்லை.

''சிவகாமியின் சபதம்'' கதையை வாசகர்கள் அறிவதற்கு முன்பே, அதை வானொலி நாடகமாய் அமைத்து இயக்கிய பெருமைக்கு உரியவர், அப்போது திருச்சி நிலையத்தில் நிகழ்ச்சி நிர்வாகியாய் இருந்த ரா. பார்த்தசாரதி. அவரே அந்த நாடகத்தில் நரசிம்ம பல்லவனாய் நடித்தார். எவ்வித உணர்ச்சியையும் குரலிலே காட்ட வல்ல டி. எஸ். பகவதி, சிவகாமியாய்ப் பேசிப் பாடினார். அந்த நாடகத்துக்கெனச் சில பாடல்களை இயற்றிக் கொடுக்கும் வாய்ப்பு, அப்போது அந்நிலையத்தில் வேலை பார்த்த இளைஞன் ஒருவனுக்குக் கிடைத்தது.

சென்னையில், தமது போக் ரோடு வீட்டில் இருந்தபடி அந்த நாடகத்தைக் கேட்ட கல்கி, மறு நாளே, பார்த்தசாரதிக்கு ஆங்கிலத்தில் ஒரு கடிதம் எழுதினார்:

நேற்றைய நிகழ்ச்சியைக் கேட்டு முழுத் திருப்தி அடைந்தேன். கதாநாயகியின் பாகம் மிக நன்றாக அமைந்திருந்தது. பிரிவுக் காட்சியும் கடைசிக் காட்சியும் சிலிர்க்க வைத்தன.

தொடக்கத்தில் கொஞ்சம் மெதுவாய் நாடகம் சென்றது போல் தோன்றிற்று. ஆனால் சிறிது நேரத்துக்குப் பிறகு விறுவிறுப்பு உண்டாகிவிட்டது.

சுந்தாவின் பாடல்கள் நேர்த்தியாய் இருந்தன......

அந்த வானொலி நாடகத்தைக் கல்கி கேட்ட சமயத்தில் அவர் மூன்றாவது சிறைவாசம் முடிந்து, சொந்தப் பத்திரிகை தொடங்குவது பற்றி யோசனை செய்து கொண்டிருந்தார். அந்த யோசனையுடன், ''சிவகாமியின் சபதம்'' கதையை அந்தப் பத்திரிகையில் எவ்வித மாறுதல், மேம்பாடுகளுடன் எழுதி வெளியிடலாம் என்று யோசனையும் கலந்திருக்கும்.

சொந்தக் கல்கி பத்திரிகையில் 1944 புத்தாண்டு இதழில் ''சிவகாமியின் சபதம்'' தொடங்கி இரண்டரை ஆண்டுகளாய் அடுத்தடுத்த இதழ்களிலும் ஆயிரம் ஆயிரம் வாசகர்களின் மனத் திரையிலும் ஓடி, இணையில்லாததோர் இலக்கியம் என்ற புகழை அடைந்தது. முதலில் அதைத் திரைக்கதையாகக் கல்கி எழுதியபோது, அதைப் படமாய் எடுக்கவல்லவர் யாரும் இல்லைதான். வல்லவர் ஒருவர் இல்லாததும், வல்லவர் அல்லாத யாரேனும் அதைப் படமாக எடுக்காமல் விட்டதும் நல்லதாய்ப் போயிற்று. அப்போது மட்டும் அது படமாய் வந்திருந்தால் அதைக் கல்கி இவ்வளவு அற்புதமான ஒரு நாவலாக எழில் வண்ணச் சித்திரங்கள் நிறைந்ததொரு காட்சிசாலைக்கு ஒப்பாக, வடிவழகுச் சிற்பங்கள் செறிந்ததொரு கூடமாக, நவரசங்கள் நடித்தாடும் ஒரு கலை அரங்காகப் படைத்திருக்க முடியுமா?

''சிவகாமியின் சபதம்'' அதன் இலக்கியச் சிறப்புக்கு ஏற்ற வனப்புள்ள நூல் வடிவில், 1948ல் முதற் பதிப்பாகவும், மூன்றாண்டுகளுக்குப் பிறகு இரண்டாம் பதிப்பாகவும் வெளிவந்தது. அந்தக் காலத்துக்குள், தமிழக சினிமாத் துறையில் வெகுவான முன்னேற்றம் உண்டாகி விட்டது. ஆனந்த விகடன் அதிபர் எஸ். எஸ். வாசன் ஜெமினி நிறுவனத்தை அமைத்து, அதன் மூலம் எடுத்த வெற்றிப் படமான ''சந்திரலேகா'', அந்த முன்னேற்றத்துக்கு ஓர் அளவீடு. ''அதற்கு இணையான தமிழ்ப் படம் இதுவரை வந்ததில்லை'' என்பது, அதைப் பற்றிக் கல்கி எழுதிய பாராட்டுரை. அந்தப் படத்துக்கும் மேலான ஒன்றை, ''பட உலகில் ஓர் அற்புதம்'' என்றும், அதைக் ''காணாத கண் என்ன கண்ணே'' என்றும் கல்கி புகழ்ந்த ''ஔவையார்'' வரலாற்றைப் பின்னர் எடுத்தார் வாசன். அதைக் கண்ட கல்கி, சினிமா சம்பந்தமாய்த் தாமும் தம்மையொத்த கலா ரசிகர்களும் நெடுநாளாய்க் கொண்டிருந்த கனவு ஒன்று பலித்து விட்டதாகக் களிப்புற்றார். அந்தப் படத்தையும், அதைப் படைத்து அளித்தவரையும் தமது பத்திரிகையில் புகழ்ந்து எழுதினார். தமது களிப்பையும் வியப்பையும் மன நிறைவையும் சொற்களிலே பொங்கவிட்டு எழுதினார்:

நீங்களும் நானும் எத்தனையோ நெடுங்காலமாக சினிமாக் கலையை உயர்த்துவது பற்றிச் சிந்தித்து வந்திருக்கிறோம். 'வெள்ளித் திரையானது மக்களின் ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் உயர்த்தி மகோந்நதம் அடையச் செய்வதற்கு ஓர் அற்புத சாதனமாயிற்றே ? இந்தச் சாதனத்தைக் கொண்டு தமிழரின் மேம்பாட்டைச் சித்திரிக்க யாராவது முன்வரமாட்டார்களா?' என்று ஆசைப்பட்டிருக்கிறோம்.

தமிழர் வாழ்வை அடிப்படையாகக் கொண்டு தமிழ் நாட்டையும் தமிழர்களையும் உயர்த்தக் கூடிய ஒரு படம் வெளி வராதா என்று ஏக்கம் அடைந்திருக்கிறோம். இது

வெறும் பகற்கனவாகவே போய்விடுமோ என்று சில சமயம் நிராசை அடைந்திருக்கிறோம்.

தமிழ் நாட்டைப் பற்றிய வரையில் அந்தக் கனவு பலித்துவிட்டது; நம்முடைய மனோரதம் நிறைவேறிவிட்டது.

தமிழ் மூதாட்டியாகிய ஔவையாரும் ஜெமினி அதிபர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸனும் ஒத்துழைத்து, நம் காலத்திலேயே வெள்ளித் திரை பற்றிய நம் ஆசைக் கனவு நிறைவேறும்படி செய்திருக்கிறார்கள்.....

ஔவை மூதாட்டி சோழ மன்னனுடைய சபைக்கு வருகையில் அவருக்கு அளிக்கப்படும் மகத்தான வரவேற்பு வைபவங்களைப் பார்க்கும் தமிழன் எவனுக்கும் உள்ளம் உற்சாகத்தினால் விம்மும்; உடல் ஆனந்தத்தினால் சிலிர்க்கும்; தோள்கள் பெருமிதத்தினால் பூரிக்கும். இந்தக் கோலாகலமான காட்சிகளையே திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டு வாழ் நாளைக் கழித்துவிடலாம் என்றே தோன்றும்.

அம்மம்மா ! தமிழன்னைக்கு அளிக்கப்படும் அந்த வரவேற்புக் காட்சிகளைப் பார்க்கும் போது பழந் தமிழ் நாட்டின் செல்வச் சிறப்புக்களும் பண்பாட்டின் உயர்வுகளும் நம் உள்ளத்தில் நிரந்தரமாய்ப் பதிந்துவிடுகின்றன. அது மட்டும் அல்ல; இந்த நாளில் வாழும் தமிழர்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் எவ்வளவு உயர்வான சாதனைகளைச் செய்யக்கூடும் என்பதும் இடையிடையே நமக்கு நினைவு வருகிறது.

மேனாட்டில் ஸெஸில் பி. டெமில், அலெக்ஸாண்டர் கோர்டா முதலிய படத் தயாரிப்பாளர்கள், பழைய ரோம சாம்ராஜ்யத்தின் சரித்திர நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கொண்ட படங்களை வெளியிட்டிருக்கிறார்கள். ரோம சாம்ராஜ்யத்தின் மகோந்நதத்தை நம் கண் முன்னால் பிரத்தியட்சமாகக் காட்டுவதற்குரிய மகத்தான காட்சிகளை வெள்ளித் திரையில் வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றைப் பார்த்து நம்மில் பலர் அதிசயத்தினால் திகைத்துத் திணறித் திண்டாடிப் போயிருக்கிறோம்.

சோழ மன்னன் ஔவை மூதாட்டிக்கு அளித்த வரவேற்புக் காட்சிகளின் மூலமாக ஸ்ரீ எஸ். எஸ். வாஸன், ஸெஸில் பி. டெமிலேயும் அலெக்ஸாண்டர் கோர்டாவையும் புறமுதுகிடும்படி செய்திருக்கிறார். இதை எண்ணும்போதெல்லாம் நாம் பெருமிதம் கொள்ளாமல் இருக்க முடியாது....

ஒவ்வொரு நிகழ்ச்சியின் முடிவும் ஒரு போதனை; ஒவ்வொரு போதனையும் மனித குலத்தை ஒரு படி மேலே உயர்த்தும் சாதனை. இப்படியாக உயர்தரமாக அமைந்திருக்கும் இப்படத்துக்கு நெடுகிலும் ஜீவ களையை அளித்து வருபவர் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்கள்.... ''இவர் ஔவையின் புனர் அவதாரம்'' என்று சொல்லக்கூடிய வாறு நடித்திருக்கிறார்.....

ஔவையார் படத்தில், தமிழும் தமிழ் இசையும் தமிழர் பண்பாடும் ஒன்றை ஒன்று தழுவி நிற்கின்றன.....

பன்னெடுங் காலமாகச் சொப்பனமாக இருந்த இலட்சியத்தையும் நிறைவேற்றி, தமிழரையும் தமிழ் நாட்டையும் மேன்மைப் படுத்தும் இந்த அற்புத சிருஷ்டியை அளித்ததற்காக என் மகிழ்ச்சியை ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். (கல்கி இதழ் 9-8-53)




தனித் தமிழ் வீரர் ஒருவர் வேதநாயகம் பிள்ளையவர்களது புகழ் பெற்ற ''பிரதாப முதலியார் சரித்திர''த்தில் உள்ள வட மொழிச் சொற்களை அறவே நீக்கி, அதைத் தூய தமிழில் எழுதியிருக்கிறார். இந்தத் திருத்திய பதிப்பை ஒரு சமயம் பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் ஒரு கல்லூரி வகுப்பில் மாணவர்கள் படிக்கக் கேட்டார். மூலத்தையே நன்கு படித்தறிந்த அவர், ''நடையை மாற்றியது போல் நூலின் பெயரையும் மாற்றி ''பரிதாப முதலியார் சரித்திரம்'' என்று புதுப் பெயர் வைத்திருந்தால் நன்றாக இருந்திருக்குமே!'' என்று கேலியாகச் சொன்னார்.

— ஏ. வி. ரங்கராஜன்

---

சினிமா சாதனம் பற்றியும், அது சாதிக்கக் கூடியது பற்றியும் பொதுவாகக் கல்கி கண்ட கனவு வாசன் மூலம் இவ்வாறு நனவானது போல, சிவகாமியின் கதை சம்பந்தமாய்த் தனி முறையில் அவர் ஆரம்பத்தில் கொண்ட ஆசைக் கனவும் ஜெமினி அதிபர் மூலமே நிறைவேறியிருக்கக் கூடும். அந்தக் கதையைத் திரைப் படமாய் ஆக்க வல்லவராய் வாசன் பரிணமித்து விட்டார்; அதற்கு மிகப் பெரும் அளவில் வேண்டிய பண பலமும் சாதன வசதிகளும் கொண்டிருந்தார்.

வாசனைக் கல்கி அணுகித் தமது கதையைப் படமாக எடுக்கும்படி கேட்டுக்கொண்டார் என்றும், அதற்கு அவர் இசையவில்லை என்றும் தெரியவருகிறது. அவர் இசையாததற்கு, விருப்பம் இல்லாமை அல்ல, நாவலின் மேன்மைக்கு ஏற்றபடி சிறப்பாகப் படத்தை எடுக்க முடியுமா என்ற மலைப்பே காரணம் என்று வாசன் சமாதானம் சொன்னாராம்.

இனியாவது யாரேனும் கல்கியின் இந்தச் சிகரக் கதையைத் திரைச் சித்திரமாய் எடுப்பார்களோ ? அப்படி எடுப்பது மூலத்தின் சிறப்பை ஓரளவேனும் பிரதிபலிக்குமோ?

எடுக்கலாம் ; பிரதிபலிக்கலாம். ஆனால் எவ்வளவு சிறப்பான திரைப் படத்துக்கும் ஓடும் காலம் என்பதாக ஒன்று உண்டு. ஓடியபின் ஓய்ந்து போகத்தான் செய்யும். வெள்ளித் திரையிலிருந்து மறைந்த பிறகு, அதைப் பார்த்தவர்களின் உள்ளத் திரையிலிருந்தும் மறைந்து போகும்.

மறையாமல் நிலைப்பது, இலக்கிய வடிவில் இலக்கியப் புத்தக வடிவில் உள்ளதுதான்!

கலையரசி சிவகாமி !
ஆயனச் சிற்பியின் அருமைக் குமாரி.
பரத நாட்டியக் கடலின் கரை கண்ட ஸுகுமாரி.
பழந் தமிழ் நாட்டு மன்னர் மன்னனாகிய மாமல்லனின் உள்ளம் கவர்ந்த ராணி.
பகைவர் நாட்டில் பல காலம் சிறையில் இருந்த செல்வி.
தான் காதலித்த மாவீரனை அடைய முடியாதென அறிந்ததும், இறைவனையே பதியாக வரித்த சிவகாமி.
ஆலயத்தில் ஆண்டவன் சந்நிதியில் ஆனந்த நடனம் ஆடி வாழுநாளைப் போக்கிய நாரீமணி !

(கல்கி தீபாவளி மலர் 1947 - சித்திர விளக்கம்)

இன்னவள் சபதம் இட்டு அதை நிறைவேற்றுவதை மையமாய்க் கொண்ட வசன காவியத்தை இயற்றும் எண்ணம், எப்போது கல்கிக்குத் தோன்றிற்று? ஆடலும் பாடலும், காதலும் பக்தியும், இன்பமும் துன்பமும், வீரமும் தியாகமும் இன்னும் எத்தனையோ நாடகப் பண்புகளும், உணர்ச்சி நிலைகளும் ரசங்களும் ரசக் கலவைகளும் ஊடாடும் அந்தச் சொல்லோவியத்தை வரையும் யோசனை எவ்விதம் தோன்றிற்று ?

பொன்னியின் புதல்வராய், பொன்னி நாட்டின் கலை வளத்தை அனுபவிக்கத் தொடங்கிய பருவத்திலேயே, தொலைவுத் தோற்றமாக, மங்கலாக, புரிந்தும் புரியாத வகையில் அதன் காட்சிகள் சில அவருடைய மனத்திலே எழுந்திருக்கும். பின்னர், பல்வேறு சரித்திர நூல்களைக் கற்கையிலும், பழம் பெரும் கவிச் செல்வங்களை அனுபவிக்கையிலும், இசைக் கலைஞர்களின் இனிய பொழிவுகளைக் கேட்கையிலும், பரதநாட்டியக் கலாவதிகளின் ஜதிக்கோல அபிநய வண்ணங்களைக் காண்கையிலும், அந்தக் கதையின் மேலும் சில கட்டங்கள், இங்கும் அங்கும் கோடிட்டுக் காட்டிய விதத்தில் ஓரளவு புலப்பட்டிருக்கும். பிறகு, திடீரென ஒரு சமயம் வெகுவான அளவில் அது, ஒரு கற்பனைத் தோற்றமாய் அல்லது கனவுக் காட்சியாய் எழுந்தது.

பண்டையச் சின்னங்கள் நிறைந்ததாயும், பண்டைய வாசனைகள் வீசுவதாயும் உள்ள கடலோரத் தலம் ஒன்றில் எழுந்தது அக்காட்சி ! (தொடரும்)

# வட்ட மேஜை

கும்பகோணம் எலெக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் என்பது தமிழ்நாடு மின்சார வாரியம் என்று அரசுடைமையாக மாறியதிலிருந்து இன்றுவரை மின்சாரக் கட்டணப் பில்கள் குறித்த காலத்தில் மின்சார உபயோகிப்பாளர்களுக்கு அனுப்பப்படவில்லை. உதாரணமாக ஜனவரி மாதத்து பில் பிப்ரவரி முதல் வாரத்தில் கிடைக்கப்பெற்று அம்மாத இறுதிக்குள் கட்டணம் செலுத்தப்பட வேண்டும். அப்படித் தவறினால் வட்டிக் கட்டணம் வசூலிக்கப்படும். இது முறை. ஆனால் ஜனவரி மாத பில் மார்ச் முதல் வாரம்தான் கிடைக்கிறது. இந்த அழகில் பிப்ரவரி மாதத்திற்குள் கட்டணம் செலுத்தப்படவில்லை என்று தாமதமாகக் கட்டியதாக வட்டி வசூலிக்கப்படுகிறது. மின்சார வாரியம் செய்யும் தவற்றுக்குப் பொதுமக்கள் பிணையா? சம்பந்தமில்லாமல் அவர்கள் வீணில் வட்டிக் கட்டணம் செலுத்தநேரிடுகிறது. இது என்னுடைய சொந்த அனுபவம் மட்டுமல்ல. கும்பகோணம் மின்சார வாரியத்தின் கீழ் மின்சாரம் பெறும் அனைவருக்கும் ஏற்படும் அல்லல்.

கும்பகோணம்,
1—5—75 கே. வேங்கடராமன்

சென்னை நகரின் பல தெருக்களில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள (அழகிய!) தெருக்களின் பெயர்கள் அடங்கிய பலகைகள் பலவும், பல்வேறு துறையின் விளம்பரப் பலகைகளாக மாறி, சென்னைக்கு வரும் புதியவர்களுக்கும் சென்னையில் உள்ளவர்களுக்கும் பல்வேறு தொல்லைகள் அளித்து வருகின்றன. அரசும், நகராண்மைக் கழகமும் இதைத் தடுத்து நிறுத்த உதவினால் அப்பெயர்ப் பலகைகள் நிறுத்தப்பட்ட நோக்கம் நிறைவேறும்; நகரின் அழகும் பாதுகாக்கப்படும்.

வடபழனி,
1—5—75 கா. அண்ணாமலை

ஒரு கிலோ உயர் ரக அரிசி 2.10, ஒரு கிலோ உருளைக் கிழங்கு 20 பைசா, ஒரு லிட்டர் பால் (7 சதவிகித கொழுப்பு நிறைந்தது) ஒரு ரூபாய், ஒரு கிலோ பட்டாணி 40 பைசா; ஒரு கிலோ புளி ரூ. 1.50, ஒரு கிலோ கோதுமை மாவு ரூ. 1.60, நெடுந்தூர டவுன் பஸ் கட்டணம் 30 பைசாகூட இல்லை. இவ்வளவும் இன்று சண்டிகார் நகரில் இன்றைய விலைவாசி நிலவரம்.

எடுத்ததற்கெல்லாம் அண்டை மாநிலத்தை ஒப்பிடும் தமிழகமுதல்வர் இத்தகைய உடோபியா நிலையும் உண்டு என்று அறிந்து செயல்பட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும். ஒழிப்புச் சட்டம் உண்டோ இல்லையோ ஒரு பிச்சைக்காரரையும் இங்கு காண முடியாது. ஆண்டவா! காத்தருள் தமிழக மக்களை.

சண்டிகார்
1—5—75 டி. ஆர். அலமேலு


கட்சி மாறும் பட்சி
கதை: குட்டி கிருஷ்ணன்
படம்: "ராஜ்"
7


கேடி சொக்கப்பன் பட்சியைத் தேடி வந்தான்.
சும்மா கண்டுக்கின்னு போகலாம்னு...
கண்டாச்சில்லே? கிளம்பலாமே!


என்னம்மா கன்னா டகல் பாச்சா காட்டறே?
அப்படினா?


எந்த பாஷையிலே நழுவப் பார்க்கிறேன்னு அர்த்தம். ஸம்திங் ஸம்திங்கா வாங்கி அடுக்கறே; எனக்கு நத்திங் தானா?
இதோ பாரு, ஸம்திங் வாங்கறதே இல்லே நான்....


அற்பக் காசுக்குக் கை நீட்டுவேனா? எல்லாம் பெரிய அளவில் தான் நடக்கும்!
அடப்பாவி!


பாவம், என்ன? செய்யறது உதவிக்கு அவங்களா பார்த்துப் பிரியப்பட்டு ஏதோ பரிசு தராங்க. நான் வேணும்னும் கேட்கப் போறேங்களா? மேஜை மேலே வைச்சுட்டுப் போயிடுவாங்க.


என் பாட்டி சொன்னப்பலே பெருமாள் கோயிலே இடிச்சுட்டு ராமாயணம் படிக்கிறே. சரி, என்னைக் கவனிச்சு அனுப்பு.
எதுக்கு உன்னைக் கவனிக்கணும்?


உன் வண்டவாளத்தைத் தண்டவாளம் ஆக்காதிருக்க!
சும்மா உடைச்சு விட்டேன். எனக்கென்ன? நிரூபிக்க முடியுமா? முடியுமென்றால் என் பொது வாழ்வுக்கே முற்றுப்புள்ளி வைக்கத் தயார்!


ஆனால் நிரூபிக்க முடியாமல் போனாலும் வீண் பழி சுமத்தியதற்காக நீ தண்டனை பெற வேண்டும். தயாரா?
இந்தச் சவால் விடற சவுடால் வேலையெல்லாம் மேடையிலே வைச்சுக்க. இப்ப எனக்குப் பணம் தேவை....


...சரியா, இல்லே, 'நான் உன்னைக் கட்சி தாவியதற்காகக் குத்தலே; பர்ஸைப் பிடுங்கத்தான் மிரட்டினேன்; தவறிப் போய்க் கத்தி பட்டுடிச்சு; ரத்தத்தைப் பார்த்து நீ பயந்து மயங்கிட்டே'ங்கற விஷயத்தைப் பத்திரிகைங்களுக்கு உடைச்சுச் சொல்லிடட்டுமா?


அப்படி சொன்னா, வழிப்பறி செய்ய முயன்ற குற்றத்துக்காக நீ கம்பி எண்ண வேண்டியிருக்கும், நினைவிருக்கட்டும்!
அது என்ன பிரமாதம்?...


...மாமியார் வீட்டுக்குப் போய் ரொம்ப நாளாச்சு! ஒரு வருஷம் குந்திக்கிட்டு இருந்துட்டு வரேன். நீ கட்டியிருக்கிற ஹீரோ கோட்டையை உடைச்ச திருப்தி போதும் எனக்கு!


நீ செய்தாலும் செய்வேடா, கேப் மாறி!
ஆ! அப்படி வா வழிக்கு! நான் வாயைத் திறக்கக் கூடாதுன்னா ஐந்நூறு ரூபாய் கொடு!

தொடரும்


கோடையில்—
சாதாரணமான சருமம்...
வாடிவிடும் வியர்க்குருவினால்..







# வாடிய பயிருக்கு வான்முகில் காமராஜ்




தலைவர் காமராஜ் சென்ற ஊர்களில் எல்லாம் நூற்றுக் கணக்கில், ஏன் ஆயிரக் கணக்கில் பாமர மக்கள் கூடினார்கள். வழி நெடுகிலும், ஆங்காங்கே உள்ள சிறு ஊர்களில் மக்கள் சாலையின் ஓரம் கூடி நின்று, காமராஜ் செல்லும் காருக்காகக் காத்து நிற்பார்கள். சில ஊர்களில் ஆரத்தித் தட்டுடனேகூட மக்கள் காத்து நிற்பார்கள்.

தலைவர் காமராஜ் மாலை ஆறு மணிக்குத் தாம் தங்கியிருக்கும் விடுதியை விட்டுப் புறப்பட்டாரானால் மூன்று நான்கு கூட்டங்களில் முப்பது மைல் சுற்றளவிலுள்ள ஊர்களில் பேசிவிட்டு இரவு ஒரு மணி, இரண்டு மணிக்குத்தான் தாம் தங்கியிருக்கும் விடுதிக்கு வருவார். சில நாட்கள் விடியற்காலை நான்கு மணிகூட ஆகி விடுவதுண்டு. பகலில் கூடியவரை அவர் பொதுக்கூட்டங்களுக்குப் போவதில்லை.

இரவு எத்தனை நேரமானாலும் பொது மக்கள் காமராஜரின் உரையைக் கேட்கக் காத்திருக்கும் அதிசயத்தைக் கண்ணால் காண முடிந்தது.

காமராஜ் அவர்கள், அகில இந்தியத் தலைவராக இருந்தும் அகில இந்திய அரசியலைப் பற்றி, அதிகம் பேசுவதில்லை . அரசியல் என்று வந்தால் அம் மக்களுக்கும் புரியும் தி.மு.க. அ.தி.மு.க.வைப் பற்றியே பேசினார். ஆயினும், அவர் அகில இந்தியக் கண்ணோட்டம் இல்லாமல் பேசவில்லை. பல கூட்டங்களில் பாரத நாட்டுப் பழம் பெருமைகளை அவருக்கே உரிய எளிய பேச்சுத்தமிழில் எடுத்தியம்பியபோது மெய் சிலிர்க்கத்தான் செய்தது.

''உலகம், விவசாயம் என்றால் என்ன என்று தெரியாத நாட்களில், பாரத நாட்டில் விவசாயம் செய்தோம். உலக நாடுகளில் ஆடை உடுத்தி அறியாத நாட்களில் நாம் மிக மெல்லிய உயர்தரமான ஆடைகளை நெய்து உலக நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வர்த்தகம் செய்தோம். கட்டடக் கலையில் மிக உயர்ந்த நிலையிலிருந்தோம். தஞ்சை ராஜ ராஜ சோழன் கட்டிய கோயில் எவ்வளவு பிரம்மாண்டமான கோயில். கட்டடக் கலையில் அற்புதம் என்று உலகமே வியக்கிறது. மதுரை மீனாட்சியம்மன் கோயில் எவ்வளவு பெரிய கோயில். வானளாவிய கோபுரம். அதில்தான் எத்தனை வண்ண வண்ணப் பொம்மைகள். இப்படி வளத்தோடு வாழ்ந்த நாடு நம் நாடு, வாழ்வில் வெறுப்பு என்பதே கிடையாது. காரணம், பசி என்பதே தெரியாது. பசியற்றிருந்தோம். பசியுள்ளவன் கலையைப் பற்றி நினைக்க மாட்டான்.



''ஆனால் இன்றைய நம் நிலை என்ன? பாரதியார் சொன்னபடி, ''வெறும் சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்'' என்ற நிலையிலுள்ளோம். ஏன், குச்சிக் கிழங்குக்குக்கூட வந்துள்ளது பஞ்சம்'' என்றார் நாமகிரிப் பேட்டையில்.

''இவ்வளவு பஞ்சம் வர வேண்டிய அவசியமில்லை. வேண்டிய ஆறுகள் நம் நாட்டில் ஓடுகின்றன. அவற்றையெல்லாம் இணைத்து, நல்லபடியாக நீர்ப்பாசன வசதி பெருக்கினால், நாட்டில் விவசாயம் பெருகியிருக்கும். பஞ்சமும் பட்டினியுமே ஏற்பட்டிரா. அதை விட்டு விட்டு மேனாட்டு மோகத்தில் தொழிற்சாலைகளைப் பெருக்குவதில் மத்திய அரசு ஈடுபட்டதில் இன்று இந்த அவல நிலை ஏற்பட்டுள்ளது!'' என்று ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டார்.

காமராஜ் ஒரு கூட்டத்தில், ''பொய் சொன்ன வாய்க்குப் போஜனம் கிடைக்காது என்பார்கள். இன்று நம் நாட்டில் பொய் சொன்னால்தான் எல்லாம் கிடைக்கும் என்ற நிலை ஏற்பட்டிருக்கிறதே!'' என்று மனம் மிக நொந்து பேசியபோது கூட்டத்திலுள்ளவர்கள் மனத்தை என்னவெல்லாமோ செய்தது.

எம். ஜி. ஆரின் சினிமா மோகத்துக்குப் பெண்கள் மயங்குவதை நினைத்த போது தலைவர் காமராஜுக்கு அடிக்கடி ராமாயணக் கதை நினைவுக்கு வந்தது. ''மாரீசன் பொன் மான் வேஷம் போட்டுக் கொண்டு ராமன் முன்னால் வந்தான். சீதை அந்தப் பொய்மானைக் கண்டு மயங்கினாள். அதைப் பிடித்துக் கொடுக்கும்படி ராமனைக் கேட்டாள். ராமன் 'அது பொன் மானல்ல; பொய்மான். நம்மை ஏமாற்ற யாரோ வேஷம் போட்டுக் கொண்டு வந்திருக்கிறார்கள்' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். சீதை கேட்கவில்லை. அந்தப் பொய் மானில் மயங்கி, பிடிவாதம் பிடித்தாள் — இப்படி சீதையே ஏமாந்த போது நீங்கள் எம்மாத்திரம்'' என்பார்.

உடனே கூட்டத்தில் பெண்கள் பகுதியிலிருந்து, ''அந்தக் காலத்து சீதை ஏமாந்தாள். ஆனால் இந்தக் காலத்துப் பெண்கள் — நாங்கள் ஏமாற மாட்டோம்!'' என்று பதில் குரல் வரும். மிக உறுதியான குரலில்.

''ரொம்ப சந்தோஷம். நீங்கள் ஏமாந்து விடக் கூடாது என்பதற்காகத்தான் வெயிலையும் உடல் தளர்ச்சியையும் பொருட்படுத்தாது ஊர் ஊராகச் சுற்றிச் சொல்லிக் கொண்டு வருகிறேன். நீங்கள் இந்தத் தடவை ஏமாந்தால், சீதையை மீட்க ராமன் கஷ்டப்பட்டது போல் நெடுநாளைக்குக் கஷ்டப்பட வேண்டியிருக்கும்!'' என்று எச்சரிக்கை செய்தார்.

திரு. எம். ஜி. ராமச்சந்திரன் சினிமாத் தலைப்புகளை வைத்தே மக்கள் ஏமாந்து போகும் பரிதாபத்தையும் திரு காமராஜ் பல கூட்டங்களில் விளக்கினார்.

''இப்ப எம்.ஜி. ராமச்சந்திரன் ஏதோ ஒரு படம் வெளியிட்டிருக்கிறாரே சிரித்து ... சிரித்து ... என்னது அது!'' என்று முழுத் தலைப்பு நினைவு வராமல் திணறுகிறார்.

அப்போது கூட்டத்திலுள்ள சிறுவர்கள் ''சிரித்து வாழ வேண்டும்!'' என்று கூறுகிறார்கள்.

''ஆங் ... சிரித்து வாழ வேண்டும் என்று படம் வெளியிட்டிருக்கிறார். இன்று நாடுள்ள நிலையில் சிரித்து வாழும்படியாகவா இருக்கு? நீங்கள் கஷ்டப்பட்டுச் சேமித்துவைத்த பணத்தில் ஒரு ரூபாய் ஒண்ணே கால் ரூபாய் கொடுத்து சினிமா பார்த்து விட்டு வாரீங்க. கையிலிருந்த காசுக்குக் கேப்பையோ சோளமோ வாங்கியிருந்தால் ஒரு பொழுதாகிலும்போயிருக்கும். அதில்லாமல், கையிலிருந்த பணத்தைச் சினிமாவுக்குச் செலவழித்து விட்டு, வீட்டுக்குப் போய்ப் பட்டினியாப் படுக்கிறீங்க. ஆனால் அவர் — சினிமா எடுத்த அவரு — சிரித்து வாழ்கிறார். நீங்கள் சிரித்து வாழவில்லை. ''நினைத்ததை முடிப்பவன்'' என்று இன்னொரு படமாம். ''நான் ஆணையிட்டால்'' என்றொரு படமாம். இவர் சினிமாவில் ஆணையிடுவது போல் நடித்தால் அங்கிருக்கும் மற்ற நடிகர்கள், கீழ்ப்படிவது போல் நடிப்பார்கள். ஆட்சிக்கு எம். ஜி. ராமச்சந்திரன் வந்ததும் இவர் ஆணையிட்டால் எல்லாம் நடந்து விடும் என்று பாமர மக்கள் நினைக்கிறார்கள். இந்தப் பாமரத் தன்மையை அரசியலுக்கு — ஆட்சிக்கு வரப் பயன்படுத்திக் கொள்வது முறையா? நியாயமா?''

திரு எம்.ஜி.ஆரின். இந்தச் சினிமாக் கவர்ச்சியை — பாமர மக்களின் இவ்வறியாமையைப் பயன்படுத்தித் தி. மு. கவை ஆட்சியில் அமர்த்தி விட்டு, இப்போது, தான் பிரிந்து வந்து அ. தி. மு. க. என்ற கட்சியை நடத்துகிறார். இரண்டு கட்சிகளுக்கும் கொள்கையளவில் ஒரு வித்தியாசமும் கிடையாது. ஆகவே தான் தலைவர் காமராஜர், ''பழைய கருப்பன் தன் பெயரைப் பழனியப்பன் என்று மாற்றிக் கொண்டு வந்தால் புது ஆள் ஆகி





## ராஜாஜி நினைவாலயம்

கிண்டியில் காந்தி மண்டபத்துக்கருகில் தமிழக அரசு எழுப்பிய ராஜாஜி நினைவாலயத்தைத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் மே மாதம் 5ந் தேதி திறந்து வைத்தார். இவ்விழாவுக்குத் தலைமை வகித்த தமிழக முதல்வர் திரு கருணாநிதி ஜெயப்பிரகாஷ் வேண்டுகோளின்படி லாட்டரி ஒழிப்பை அமுல்படுத்துவதாக வாக்குத் தந்தது இவ்விழாவின் சிறப்பு அம்சம். கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் ராஜாஜியின் திருவுருவச் சிலையைத் திறந்து வைத்தார். ராஜாஜி நினைவாலயத்தையும், ஜெயப்பிரகாஷ் அதனைத் திறந்து வைத்த காட்சியையும் தமிழக முதல்வர், கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் ஆகியோரோடு ஜெயப்பிரகாஷ் ராஜாஜியின் உருவச் சிலையைக் கண்டு மகிழ்வதையும் படங்களில் காணலாம்.



விடுவாரா என்ன? பழைய கறுப்பன், கறுப்பன் தான்! தி. மு. க. — அ.தி.மு.க. இரண்டுமே ஒன்றுதான். இரண்டும் ஒழிக்கப்பட வேண்டிய கட்சிகள் ''என்று உள்ளத்தில் பதியும்வகையில் மேற்கண்ட உதாரணம் கூறி விளக்குவார்.

திரு காமராஜ் பொதுக் கூட்டங்களில் இன்னொரு கதையைச் சொல்லுவார்.

இரண்டு பேர் ஒரு வீட்டுக்குள் திருடப் போனார்கள். ஒருவன் வீட்டுக்குள் திருடப் போனான். இன்னொருவன் வீட்டுக்கு வெளியில் காவல் இருந்தான். பிறகு கொள்ளையடித்த பொருளைப் பங்கு போட்டுக் கொள்வதில் இருவரிடையே சண்டை வந்தது. காவல் நின்றவன், முதல்வனை 'அவன்தான் திருடினான்' என்று குற்றம் சாட்டினான் போலீசில். — போலீஸ்காரர் ''அவன் திருடியது சரி, அவன் திருடிய போது நீ எங்கேயிருந்தாய்?'' என்று கேட்டார். ''நான் அவன் திருடிய போது, அந்த வீட்டு வாசலில் காவல் காத்து நின்றேன்'' என்றான். ''திருட்டுக்கு உடந்தையாக இருந்த நீயும் திருடன்தான். நீ தப்ப முடியாது!'' என்றார்.

அதுபோல் தி.மு.க. ஆட்சிக்கு உடந்தையாக இருந்த எம். ஜி. ஆர். மக்களின் குற்றச் சாட்டிலிருந்து எப்படித் தப்ப முடியும்?

தி. மு. க. ஆட்சியில் ஊழல் நிலவுகிறது என்றால் முதல்வர் திரு மு. கருணாநிதி, 'ஊழல் என்றால் எங்கே நிரூபியுங்கள், பார்ப்போம்' என்று சொல்கிறார்.

இந்தப் பதில் எவ்வளவு அபத்தம் என்பதைத் தலைவர் காமராஜ் ரசமான ஒரு கதையின் மூலம் விளக்கினார்.

போலீஸில் போய் ஒருவன் ''திருட்டு போய் விட்டது, வீட்டில்'' என்று சொன்னான். போலீஸ்காரர் ''திருட்டு போய் விட்டதா? அப்படியானால் போய்த் திருடனைப் பிடித்துக் கொண்டு வா ஐயா!'' என்றாராம்.

இதைக் கேட்டவுடன் அக் கூட்டத்தினர் அத்தனை பேரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

ஆம், ஊழல் என்றால், எங்கே, எப்படி நடக்கிறது என்று கண்டுபிடிப்பது அரசாங்கத்தின் கடமையே அன்றி மக்களின் கடமையல்ல என்றார் தலைவர் காமராஜ்.

சோஷலிச மாய வாதமும் இனி செல்லாது என்பதை மிகத் தெளிவாகப் பல கூட்டங்களில் காமராஜ் விளக்கி விட்டார்.

''25 வருஷங்களாக சோஷலிசம் வருது வருது என்று சொல்லி ஜனங்களுக்கு அதில் நம்பிக்கையே போய் விட்டது'' என்றார் கிருஷ்ணகிரி கூட்டத்தில்.

''இந்திரா காங்கிரஸ் 1971-ல் தி.மு.க.வுடன் கூடா நட்பைக் கொண்டதை வேண்டாம் என்று எச்சரித்தேன். இப்பொழுது அ.தி.மு.க.வுடன் வைத்துக் கொள்ளலாம் என்று பார்க்கிறது. இது பேயை விரட்டி விட்டுப் பிசாசைக் கட்டிப் பிடித்துக் கொண்டாற் போல்தான்.

இன்னொரு கூட்டத்தில், ''அப்போது தி.மு.க்.வுடன் சேர்ந்ததற்குக் காரணம், எப்படியாவது காமராஜைத் தோற்கடிக்க வேண்டும் என்பது. சேர்ந்தார்கள். இப்பொழுது தி.மு.க.வுடன் சேர்ந்தது தவறு என்று புலம்புகிறார்கள். மீண்டும் அதே மாதிரி தவற்றை — அ.தி.மு.க.வுடன் சேர்ந்து செய்யப் போகிறார்கள். வேண்டாம் என்று எச்சரிக்கிறேன்.

''நான் அரசியல் கட்சிகள் கூட்டுச் சேருவதை எதிர்ப்பவனல்ல. நல்லவர்களோடு சேர வேண்டும். நல்ல கட்சிகளோடு சேர வேண்டும். அப்படிச் சேர்ந்தால் எனக்கு ஆட்சேபணையில்லை'' என்று இந்திரா காங்கிரசுக்கு எச்சரிக்கையும் யோசனையும் விடுத்தார்.

ஆனால் தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் தலைவர் காமராஜ் மிகத் தெளிவாக இருக்கிறார். அவர் யாருடனும் கூட்டுச் சேருவதாக இல்லை. அவர் தனியே நின்று நேர்மையான நல்லவர்கள் கொண்ட ஆட்சியை நிலைநிறுத்தப் பாடுபடுகிறார்.

நல்ல காலமாகத் தமிழ்நாட்டுக் காமராஜ் காங்கிரசில் பழம் பெருச்சாளிகளோ, மக்கள் நம்பிக்கையையும் அன்பையும் இழந்தவர்களோ யாருமில்லை. காமராஜரைச் சுற்றி நேர்மையும் நியாய உணர்ச்சியும் கொண்ட பல இளைஞர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். தர்மபுரி ஜில்லா காங்கிரஸ் தலைவர் திரு பொன்னுசாமி எவ்வளவு அடக்கமாக, பண்பாளராக விளங்குகிறார்.

அப்படியே காந்தி சகாப்த காலத்திலிருந்து தன்னலமற்ற சேவை செய்து உள்ளூரில் நல்ல பெயர் எடுத்துள்ள பல காங்கிரஸ்காரர்கள் காமராஜ் பின்னால் நிற்கிறார்கள். காவேரிப் பட்டினம் நாகராஜ மணியக்காரர், திரு பட்டாபிராம், சேலம் ஜில்லா செயலாளர் திரு நாராயணன் — இப்படிப் பலரைச் சொல்லலாம்.

செல்வமும் செல்வாக்கும் மிக்க சேலம் ராமசாமி உடையார், டி. சிவஞானம் பிள்ளை போன்ற நல்ல பிரமுகர்கள் காமராஜ் கூறி வரும் கொள்கைகளில் தீவிர ஆர்வங் கொண்டிருக்கிறார்கள்.

எல்லாவற்றையும் விட மக்கள் உள்ளங்கள் சென்ற பத்து ஆண்டுகளாகக் கடும் வெயிலில் உலர்ந்து கருகியிருந்தன. காமராஜ் வருகிறார் என்றவுடன் அந்த உள்ளங்கள் எல்லாம் தழைத்து தலைநிமிர்ந்து நின்று வரவேற்கின்றன. இதோ விமோசனம் அளிக்கப் புண்ணிய புருஷர் வருகிறார்; என்று ஆண் பெண், இளைஞர், சிறுவர் எல்லாரும் கூடி நிற்கின்றனர்.

பாரதியார் சொல்வது போல்: 'வானை மறந்து விட்ட பயிருண்டோ? 'காந்தியத்தை மறந்து விட்ட மக்களுமுண்டோ?'' **(முற்றும்)**

அட்டைப்படம் : கே. எஸ். ராமானுஜம்

# தேசபக்தர் வாசுதேவய்யா

**ப**ழம்பெரும் தேசபக்தர் எம். ஜி. வாசுதேவையா தமது தொண்ணூற்று ஐந்தாவது வயதில் சேலத்தில் சமீபத்தில் அமரத்துவம் அடைந்தார்.

1920ம் வருடம் ஒத்துழையாமை இயக்கத்தைக் காந்திஜி தொடங்கியபோது தமது வக்கீல் தொழிலை நிறுத்தி நாட்டுப் பணியில் ஈடுபட்டார்.

சேலம் நகரவாசிகள் அவரைச் ''சேலத்தின் காந்தி'' என்று அக்காலத்தில் அழைத்தார்கள். சர்க்கார் உத்தரவை மீறிக் கள்ளுக் கடை மறியலில் ஈடுபட்டு ஒரு கள்ளுக்கடை முன்னால் இவர் நின்றிருந்தபோது குதிரைப் போலீஸார் இவரை விலகிப் போகும்படி கட்டளை இட்டார்கள். இவர் அதைப் பொருட்படுத்தவில்லை. போலீஸ் குதிரைகள் இவரைக் கீழே தள்ளி மிதித்தன. இவர் பிறகு சிறைப்பட்டுக் கோயமுத்தூர் மத்திய சிறையில் இருந்தார். ஏப்ரல் மாதத்தின் ஒரு தேதியை ஒரு காலத்தில் ஜாலியன்வாலாபாக் படுகொலை தினமாக உபவாசம் இருந்து கொண்டாடுவது அக்காலத்திய மரபு. எம்.ஜி. வாசுதேவையா அவர்களும் உண்ணாவிரதம் இருக்க விரும்பினார். அதிகாரிகள் ஆட்சேபித்தார்கள். ஆட்சேபணையைப் பொருட்படுத்தாமல் வாசுதேவையா உண்ணாவிரதம் இருந்தார். அதிகாரிகள் சினந்து அவரைச் செக்கு இழுக்குமாறு உத்தரவிட்டனர். அவர் தண்டனையை ஏற்றுக் கொண்டார். அதற்குப் பத்து வருஷங்களுக்கு முன்னால் வ.உ.சி.க்கு நடந்ததை இந்தச் சிறை அதிகாரி திருப்பி நடத்திக் காண்பித்தார். மகாத்மா காந்தியின் 'யங் இந்தியா' பத்திரிகையிலும் இதைப் பற்றிய செய்தி விமரிசிக்கப்பட்டது.

இவருடைய தியாகத்தை மதிக்கும் முறையில் தமிழக காங்கிரஸ் இவரைத் திருப்பூரில் நடந்த மாகாண மகாநாட்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர்.

ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவியை ஏற்றுக் கொண்டதும் புளகாங்கிதம் அடைந்த வாசுதேவையா, 'நீங்கள் எவ்வளவோ தியாகம் செய்தீர்கள். நீங்கள் இந்தப் பதவியைப் பெற்றது குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன்' என்று எழுதியிருந்தார்.

அதற்கு ராஜாஜி தம் கைப்பட ஆங்கிலத்தில், ''நீங்கள் செய்யாத எந்தத் தியாகத்தை நான் செய்துவிட்டேன்? எனக்கு இந்தப் பதவியில் மகிழ்ச்சி இல்லை. ஆனால் நீங்கள் மகிழ்ச்சி அடைந்தீர்கள் என்பது எனக்கு இன்பத்தை அளிக்கிறது'' என்று உருக்கமாக எழுதிய பதிலை ஒரு கண்ணாடி பிரேமில் போட்டு வாசுதேவையா தம் வீட்டின் சுவரில் மாட்டியிருந்ததை எங்களுக்குப் போன வருஷம் காண்பித்த உருக்கமான காட்சி இப்போதும் என் கண் முன் நிற்கிறது.

— வி. ஆர். நரஸிம்மன்





# மகளின் மகத்தான மங்கள மண நாளுக்கு

# முத்துக்குவியல்

உங்களது செல்வ மகளின் திருமணம் சிறப்பாக நடைபெறத் தேவையான பணம் சேமிக்கத் தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்கின் புதிய 'முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்' உதவுகிறது. **இத்திட்டத்தினால் உங்கள் டிபாசிட்டு-களுக்கு அதிகபட்சம் 33.83% வரை வட்டி கிடைக்கிறது.**

ரூ. 1000/- மற்றும் ரூ. 1000/- த்தின் பெருக்குத் தொகை-களில் டிபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.
**5** ஆண்டுகளுக்கு மேல் **21** ஆண்டுகள் வரை டிபாசிட் செய்து, இத்திட்டத்தில் பயனடையலாம்.

---

இன்றே இத்திட்டத்தில் ரூ. **12,500/-** முதலீடு செய்யுங்கள். 21 ஆண்டுகள் முடிந்ததும் ரூ. **1,01,313-00** பெறுங்கள்.

---

இந்த "முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்" மூலம் உங்கள் அருமை மகனின் உயர் கல்விக்கு வேண்டிய பணத்திற்கும் வகை செய்யலாம். அன்புப் பெற்றோர்களுக்கு "முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்" ஒரு அரிய வாய்ப்பு.




# தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிமிடெட்.

*(ஷெட்யூல்ட் பேங்க் — ஸ்தாபிதம் 1921)*

*ரிஜிஸ்டர்ட் அலுவலகம்:*
56, பீச் ரோடு, தூத்துக்குடி-628001

உங்களுக்கு பணிபுரிய தமிழகத்தில் 35 கிளைகள்.

FP-TMB-103-R

# தீவுகள்

## இந்திரா பார்த்தசாரதி

ராகேஷ் மிரட்டியதைக் கண்டதும் மோகினிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ''மரியாதையாகப் பேசா விட்டால் என்ன செய்வாய்?'' என்று கேட்டாள்.

''கொன்றுவிடுவேன்'' என்று கத்தினான் ராகேஷ்.

'' இப்பொழுதே கொன்றுவிடு.... இப்பொழுதே கொன்றுவிடு....'' என்று கத்திக் கொண்டே அவன் கைகளை இழுத்துத் தன் கழுத்தில் வைத்துக் கொண்டாள் மோகினி.

அவன் கைகளை உதறிக் கொண்டான். '' உன்னைக் கொல்லக் கடவுள்கூட வெட்கப் படுவார். அவ்வளவு ஈனமான பிறவி நீ....'' என்றான் ராகேஷ்.

அவன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தாள் மோகினி. ''என்ன சொன்னாய்? என்ன சொன்னாய்?''

''அவன் சொன்னதில் என்ன தப்பு இருக்கிறது? நீ ஈனமான பிறவிதான்.''

மோகினி திரும்பிப் பார்த்தாள். சதீஷ் நின்று கொண்டிருந்தான்!

'' உன் அப்பன் ஜி. பி. ரோட் போறானே, அவனைவிடவா, நான் ஈனமான பிறவி? உன் பெண்டாட்டி ஊரில் உள்ளவர்களையெல்லாம் தேடிக் கொண்டு அலைகிறாளே, அவளைவிடவா நான் ஈனமான பிறவி...?'' என்று உச்சஸ்தாயியில் கத்தினாள் மோகினி.

''ஜி. பி. ரோட்டில் இருக்க வேண்டியவர்கள் பங்களாவில் இருந்து விட்டால் மட்டும் அவர்கள் உயர்ந்த பிறவிகளாகிவிடுவார்களா? உன்னைப் பற்றி எனக்கு எல்லாம் நன்றாகத் தெரியும்..... அநாவசியமாகப் பேசாதே.... என் வாழ்க்கையைக் குட்டிச் சுவராக்கியதே நீதான்..... குழந்தையிலிருந்தே, என்னை அடக்கி ஆண்டு என்னை எதற்கும் உபயோகமில்லாதவனாக்கி விட்டாயே, உனக்கு இன்னுமா திருப்தி இல்லை? வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிஷமும் அவமானத்தால் மனம் புழுங்கிச் சாக வேண்டும்



என்பதற்காகவா எனக்குக் கல்யாணம் செய்து வைத்தாய் ? — சீ...! நீ ஒரு மனுஷியா ?''

சதீஷ் இவ்வளவு ஆத்திரத்துடன் பேசி விஜயா கேட்டதே கிடையாது.

'' உனக்கும் என்னைக் கொல்ல வேண்டும் என்று ஆசையிருந்தால் கொன்றுவிடு.... '' என்றான் மோகினி.

''உன்னைக் கொல்ல வேண்டும் என்று யாருக்குத்தான் ஆசையில்லை ? ரூபியும் அப்படி நினைத்தாளானால் நான் ஆச்சரியப் படமாட்டேன்'' என்றான் சதீஷ்.

'' எதற்காக நீ நிற்கிறாய்? நீ போய்த் தொலையேன் '' என்று விஜயாவைப் பார்த்துக் கூச்சலிட்டாள் மோகினி.

விஜயா பங்களாவை விட்டு வெளியே வந்தாள். ராகேஷ் சொல்வது உண்மைதான். அந்த வீட்டிலிருப்பது, ஒரு கெட்ட சொப்பனம் போன்ற அநுபவம் என்பதில் சந்தேகமில்லை.

இப்பொழுது எங்கே போவது ? — தன் வீட்டுக்குத்தான் போக வேண்டும். 'ஏன் வேலையை விட்டாய்?' என்று அம்மா கேட்பாள். எல்லாவற்றையும் ஆரம்பத்திலிருந்தே சொன்னால் தான் அவளுக்குப் புரியும். ராகேஷைப் பற்றிச் சொல்லலாமா? — ஒரு பணக்காரப் பையனுக்குப் பொழுது போக்காக ஏற்படக் கூடிய சபலமாக இது இருக்கலாம். இதற்கு மேல் இவ்விஷயத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பது, தன்னை அசடாக்கிக் கொள்வதில்தான் முடியும். முழுவதுமே கெட்ட சொப்பனமாய் இருந்து விடுமா? நடு நடுவே இனிய கனவும் வரலாம் அல்லவா ? அது போல்தான்.....

ஓர் ஓரம் மரத்தருகே, வெயிலில் காய்ந்து கொண்டு ஒருத்தி கடலை விற்றுக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் இரண்டு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. அக்காட்சியைப் பார்த்தபோது, அவளுக்கு நிம்மதியா யிருந்தது. திடீரென்று ஒரு சுதந்திர உணர்வு அவளை ஆட்கொண்டது. வீசிய மென் காற்றை நெஞ்சுக் குழி வரையில் உள்ளே இழுத்தாள். இதமாக இருந்தது.

வரும்போது ரூபியிடம் சொல்லிக் கொண்டு வந்திருக்கலாம். ஸ்வர்ணா, அவளை ரூபியின் அம்மாவாக இருக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டது நினைவுக்கு வந்தது. அந்த வீட்டில் பிறந்திருப்பதுதான் அந்தக் குழந்தையின் பெரிய துரதிர்ஷ்டம். தாயும் இல்லை.....! தகப்பனும் அறவே இல்லை !

ராகேஷ் தன்னைத் துரத்திக் கொண்டு வருவானோ ? — வந்தால் என்ன செய்வது ?— அந்த வீட்டில்தான் தான் இனி வேலை செய்யப் போவதில்லையே, யாருக்காகப் பயப்பட வேண்டும் ?—





துணிமணிகள் ஒன்றையும் எடுத்துக்கொள்ளாமல் வந்துவிட்டோமே என்ற நினைவு வந்ததும், திரும்பிப் போகலாமா என்று ஒருகணம் தயங்கினாள். .... வேண்டாம்.... 'டெலிபோனில் சொல்லி யார் மூலமாவது அனுப்புங்கள் என்று கேட்பதில் என்ன தப்பு ?

இப்பொழுது வேலை தேடியாக வேண்டும். 'அவளை எனக்குக் காப்பாற்றத் தெரியும்' என்று ராகேஷ் சொன்னது அவள் ஞாபகத்துக்கு வந்தது. தன்னை மட்டும் காப்பாற்றினால் போதுமா? தன் குடும்பத்தை யார் காப்பாற்றுவார்கள் ? ராகேஷிடம் இதை அப்பொழுதே சொல்லியிருக்க வேண்டும். அவனுடன் அவளும் வீட்டை விட்டுப் புறப்பட்டு வருவதென்றால் அதன் விலை என்ன என்று அவன் தெரிந்து கொள்ள வேண்டாமா? தான் வீட்டை விட்டு வரத் தயாராக இருப்பது போல், அவனும் குடும்பத்தை உதறி விட்டு வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறாள்..... அது எப்படி முடியும் ? —

உமாவுக்கு இதுதான் கடைசி வருஷம். இன்னும் ஆறு மாதங்களில் அவளுடைய படிப்பு முடிந்து, அவளும் வேலைக்குப் போனால்

தான் தனக்கு நிம்மதி. அனுவுக்குப் பள்ளிக் கூடத்தில் இது கடைசி வருஷம். அப்புறம் அவள் கல்லூரியில் சேர வேண்டும். பானுவைப் பற்றிக் கவலையில்லை. பள்ளிப் படிப்பு முடிய இன்னும் மூன்று வருஷங்கள் இருக்கின்றன. பொறுப்பைப் பற்றித் தொடர்ந்து எண்ணும்போது, அம்மாவைப் பொறுத்த வரையில், எல்லோருக்கும் கல்யாணம் ஆக வேண்டும்!

ராகேஷின் கவனம் தன்மீது விழக்கூடாதா என்று அவள் உள்ளூற பல சமயங்களில் நினைத்ததுண்டு என்பதை மறுக்க முடியாது. ஆனால் இது என்ன அசட்டுத்தனமான நைப்பாசை என்ற எண்ணம் உடனடியாகத் தோன்றி அவள் அதை மறந்துவிடுவாள். ஆனால் சினிமாக் கதைகளில் வருவது போல் ஒரு பணக்கார வீட்டுப் பையன் தன்னை விரும்புகிறான் என்ற உண்மை, அவள் எதிர்பார்த்த அளவுக்கு அதிர்ச்சியைத் தரவில்லை என்பதுதான் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இதற்கு என்ன காரணம்? ராகேஷின் சுபாவத்தைப் பார்க்கும்போது அவனால் தன்னைப் போன்ற பெண்களைத்தான் விரும்ப முடியும் என்று தன் உள் மனத்தில் ஏற்கனவே பட்டுவிட்டதா? அல்லது பழங்காலத்துக் காதல கதைகளில் வருவதுபோல், இந்தத் 'தொடர்பு' ஜென்மம் ஜென்மமாக நிகழ்ந்து வருகிறதா என்ற நினைவு தோன்றியதும் அவளுக்குச் சிரிப்பு வந்தது.

'தவுலா குவான்' பஸ் ஸ்டாப் வந்துவிட்டது. 'வேலையை விட்டுவிட்டேன்' என்று சொல்லிக் கொண்டு வீட்டுக்குப் போக அவளுக்கு விருப்பமில்லை. மறுபடியும் வேலை கிடைக்கக் கூடும் என்ற நம்பிக்கையாவது அம்மாவுக்குத் தர வேண்டும். மோகினியையும் அவள் அம்மாவையும் ஒப்பிட்டு நினைக்கும் „போது, 'வாழ்க்கை என்ன ஒரு குரூரமான ஹாஸ்யம்' என்று அவளுக்குப் பட்டது. பணத்தை ஊதாரித்தனமாக வாரியிறைத்த அப்பாவுடன் அம்மா சண்டை போட்டு ஒரு தடவைகூட அவள் பார்த்ததில்லை. விவரம் தெரிந்த பிறகு, அவள்தான் சண்டை போட்டிருக்கிறாள். அப்பாவும் நல்லவர்தான். என்னதான் அவர் திட்டினாலும் வாயைத் திறக்கமாட்டார். பழக்கங்களாகிவிட்ட அவருடைய குறைகளை அவருக்கு ஏற்பட்ட தீராத வியாதிகள் என்றுதான் சொல்ல வேண்டும். தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு, சீட்டு ஆடாமலும், குடிக்காமலும் வீட்டில் அவர் உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும் போது, பரிதாபமாக இருக்கும். பிரமை பிடித்தாற் போல் இருப்பார். தானே பணத்தைக் கொடுத்து அவரை வெளியில் அனுப்பலாமா என்று அவள் நினைப்பது உண்டு. அவர் சம்பாதிக்காமல் இல்லை.... நிறையச் சம்பாதித்தார். வீட்டில் சௌகரியமாகத்தான் இருந்தது. ஆனால் அவர் போன பிறகுதான் எல்லாம் பழங் கனவாய் முடிந்துவிட்டது. சேமிப்பு என்று ஒரு பைசாகூட இல்லை! — அவர் காரியங்களுக்குக்கூடக் கடன் வாங்க வேண்டியிருந்தது! —

இந்த நினைவு வந்ததும், வேலையில்லாமல் வீட்டுக்குப் போவது ஒரு 'பாவம்' போல் அவளுக்குப் பட்டது. யாரைப் பார்க்கலாம்?

யாரைப் பார்க்கலாம் என்பதற்கு விடையாகத் திடீரென்று அந்த எண்ணம் வந்ததும், அவள் ஒரு கணம் திடுக்கிட்டு நின்றாள். ஏன் பார்த்தால் என்ன தப்பு? நிச்சயமாக அவர் உதவி செய்யக் கூடும்.

கபூரின் அலுவலக முகவரி அவளுக்கு மனப்பாடம். மோகினிக்காக அடிக்கடி ஃபோன் செய்திருக்கிறாள். அவர் மிகவும் 'பிஸி'யாக இருப்பாரே, பார்ப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியமா? ராகேஷ் விவகாரம் பற்றி அவருக்குத் தெரிய வந்தால்....? இது பற்றி அவருடைய அபிப்பிராயம் என்னவாக இருக்க முடியும்? குடும்பத்தில் அவர்களுக்குள் ஆயிரம் சண்டை இருந்தாலும், தன்னை அவர் 'வேலைக்காரப் பெண்' என்று நினைத்தாரானால்....? இதைப் பற்றி அவரைக் குற்றம் சொல்ல முடியுமா? அப்படி அவர் நினைக்கக் கூடியவரல்லர் என்று தோன்றுகிறது. அவரைப் போய்ப் பார்த்தால் என்ன?

'பர்ஸை'த் திறந்து பார்த்தாள். பத்து ரூபாயும் சில்லறையும் இருந்தன. பஸ்ஸைப் பிடித்துப் போக முடியாது. ஆஃபீஸ் கூட்டம் சேர்ந்துவிட்டது. மலைப் பாம்பைப் போல் நீண்ட 'க்யூ'. சொல்லி வைத்தாற்போல் ஆட்டோ — ரிக்ஷாக்காரன் ஒருவன் அவள் அருகில் வந்து நின்றான். ஏறிக் கொண்டு 'ஜன்பத்'துக்குப் போகச் சொன்னாள்.

சாதாரணமாக அவர் மதியத்துக்குப் பிறகுதான் தம் ஆபீஸைவிட்டு வெளி இடங்களுக்குப் போவது வழக்கம். அந்தச் சமயங்களில் அவர் எங்கே இருக்கிறார் என்று கண்டுபிடிப்பது சிரமம். தொழில் துறை ஆலோசகர் என்ற முறையில் பல நிறுவனங்களின் கூட்டங்களுக்குப் போகும்படியாக இருக்கும். தம் மீது பச்சாத்தாபம் கொண்டு ஏதாவது ஒரு நிறுவனத்தில் வேலை வாங்கித் தராமல் போய் விடுவாரா? மோகினி அவளை வேலையை விட்டு நீக்கிவிட்டாள் என்பதே அவள் மீது அவர் அக்கறை கொள்ளுவதற்குப் போதுமான காரணமாக இருக்கும். இன்றே வேலை கிடைக்க வேண்டும் என்பதில்லை. அவருடைய வாக்குறுதியே தான் வீட்டுக்குப் போவதற்கான நம்பிக்கையை அளிக்கலாம்.

கபூருடைய ஆஃபீஸ் ஒரு பெரிய கட்டடத்தில் மூன்றாவது மாடியில் இருந்தது. 'ரிஸப்ஷன் ஹாலி'ல் பலர் உட்கார்ந்திருந்தார்கள். எல்லோரும் அவரைப் பார்க்க வந்திருந்தார்களானால், தான் எத்தனை நேரம் காத்திருக்க வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு அவ்வளவு உற்சாகத்தைத் தருவதாக இல்லை. 'டெலிஃபோன் ஆபரேட்டராக' உட்கார்ந்திருந்த பெண், பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தாள். கிட்டப் போனதும்தான் அவள் அவ்வளவு அழகு இல்லை என்று தெரிந்தது. 'மேக்—அப்' போட்டுப் போட்டு முகத்தின் சருமம் சற்றுத் தடிமனாகக் காணப்பட்டது. கண்ணுக்குக் கீழே நிழல் வட்டங்கள்.

''நான் மிஸ்டர் கபூரைப் பார்க்க வேண்டும்....'' என்றாள் விஜயா.

''அப்பாய்ன்ட்மென்ட் இருக்கிறதா?''

''இல்லை..... வந்து.....''

''ஐ ஆம் ஸாரி.... 'அப்பாய்ன்ட்மென்ட்' இல்லாமல் அவர் யாரையும் பார்ப்பதில்லை.''



நண்பர்கள் அடிக்கடி வருகை புரிவதே, ஒரு வீட்டினுடைய அலங்காரம் ஆகும்.

— எமர்ஸன்

## லக்மே லவெண்டர் டால்க்

# கொஞ்சி மணக்கும் ஃபிரெஞ்சு மயக்கம்...
# ஃபிரெஞ்சுக்காரரே நெஞ்சாரப் பாராட்டுவார்.

லக்மே லவெண்டர் டால்க்—பூத்து மலர்ந்த ஃபிரெஞ்சு லவெண்டர் பூக்களின் வைபோக மணம். இன்ப இரகசியங்கள் பேசும்...மோகனக் கணை வீசும். பூசிக் கொள்வீர் லக்மே லவெண்டர் டால்க். யாவரையும் மதிமயக்குவீர்!




# லக்மே
லவெண்டர் டால்க்

உங்கள் எழில் எங்கள் தொழில்

லக்மே



# உங்களுக்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் வேண்டிய அளவு கிடைப்பதில்லையா?

**நாளொன்றுக்கு ஒரே ஒரு 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே உங்கள் அன்றாட முக்கியத் தேவையைப் பூர்த்தி செய்கிறது.**

வைட்டமின் பற்றாக்குறையா? ஆம், நீங்கள் உட்கொள்ளும் மிகச் சிறந்த உணவில் கூட வைட்டமின்களும் தாதுப்பொருள்களும் குறைவாக இருக்கலாம். கடும் உழைப்பாளியான உங்களைப் போன்றவருக்கு ஆரோக்கியமும், சக்தியும் மிக முக்கியமாகும்.

நாளொன்றுக்கு ஒரே ஒரு 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே உங்களுக்கு 11 வைட்டமின்கள் மற்றும் 5 தாதுப்பொருள்களின் மூலம் முழுமையான ஆரோக்கியமும் சக்தியும் அளிக்கிறது. உங்கள் அன்றாட முக்கியமான தேவைகள் நாளொன்றுக்கு 20 பைசாவுக்கு மட்டுமே கிடைக்கிறது.



இன்றே உங்கள் அருகாமையிலுள்ள கெமிஸ்ட்டிடம் சென்று 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே வாங்குங்கள்.

சரியான முறையில் நாளைத் துவக்குங்கள். அதாவது, 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே மூலம் துவக்குங்கள்.

## 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே

டிரேட் மார்க் 'ரோஷ்'

ஒரு 'ரோஷ்' தயாரிப்பு

**ஊட்டச்சத்து நிறைந்த பளபளக்கும் சிவந்த டாப்லெட்**

HT-RP-8710

''கொஞ்சம் அவசரமாகப் பார்க்க வேண்டும். அவருடைய பி.ஏ.வைக் கூப்பிடுங்கள்.''

அவள் விஜயாவை ஏற இறங்கப் பார்த்தாள். பிறகு எண்களைச் சுழற்றிவிட்டுப் பேசினாள். ''இங்கு ஒரு பெண்—'' என்று சொல்லிவிட்டு அவளைக் கேட்டாள்: ''உங்கள் பேர் என்ன?''

''விஜயா!''....

''எஸ்.... மிஸ் விஜயா ('மிஸ்' என்று சொல்லிவிட்டு முகத்தில் கேள்விக் குறி)... உங்களுடன் பேச விரும்புகிறாள்......''

விஜயா ஃபோனை வாங்கிக் கொண்டாள். கபூரின் அந்தரங்கக் காரியதரிசி மிஸ்டர் மணியுடன் அவள் பல தடவை போனில் பேசியிருக்கிறாள். அவனை அவள் நேரில் பார்த்திராவிட்டாலும் குரல் மூலம் அறிவாள். சில சமயங்களில் தமிழிலும் பேசியதுண்டு......

''மிஸ்டர் மணி.... விஜயா பேசறேன்.... மிஸ்டர் கபூரை உடனே நான் பார்க்கணும். முடியுமா ?''

''என்ன அவ்வளவு முக்கியமான விஷயம்? ஆஃபீசுக்கே வந்துட்டீங்க ?''

''பர்ஸனல்.....''

''இருங்க, அவரைக் கேட்டுச்சொல்றேன்.''

சிறிது நேரம் கழித்து ஓர் இளைஞன் வெளியே வந்தான். அவன் 'ரிஸப்ஷன் ஹாலி'லிருந்த எல்லோரையும் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, 'மிஸ் விஜயா ?' என்று உத்தேசமாக அவளாகத்தான் இருக்க வேண்டும் என்று விஜயாவைப் பார்த்துக் கேட்டான்.

விஜயா புன்னகையுடன், ''ஐ ஆம் விஜயா !'' என்றாள்.

''மிஸ்டர் கபூர் கூப்பிடுகிறார்.''

மற்றவர்கள் அவளைப் பொறுமை உணர்வுடன் பார்ப்பது போல் அவளுக்குப்பட்டது. அவளுக்கு மார்பு சற்று வேகமாக அடித்துக் கொண்டது. அவர் தன் மீது அநுதாபம் கொள்ளும்படியாகப் பேசியாக வேண்டும்.... வீட்டில் மோகினியால் மிக எளிமையாக்கப் பட்டிருந்த கபூர் உண்மையில் எவ்வளவு பெரியவர் என்று இங்கு வந்தால்தான் தெரிகிறது ! அலுவலகத்துக்கு ஏற்ற ஒரு மிடுக்கு. அவரிடம் இருந்தால் என்ன செய்வது? — அப்படி இருந்திருந்தால், வந்த உடனுக்குடனே இந்தப் பேட்டி கிடைத்திருக்காது.... ராகேஷ் விவகாரமாகத்தான் தகராறே வந்தது என்பதைச் சொல்லித்தான் ஆக வேண்டும்..... எதையும் மூடி மறைக்கக் கூடாது. அப்படி மூடி மறைப்பதையும் அவர் விரும்ப மாட்டார் என்றுதான் தோன்றுகிறது.

கபூருடைய அறை மிகப் பெரிதாக இருந்தது. ஒரு பெரிய மேஜை. அது பளபளத்தது. மேஜையில் காகிதங்களோ, ''ஃபைல்களோ இல்லாமல், மிகவும் துப்புரவாக இருந்தது. சுவரில் ஒரு நவீன பாணிச் சித்திரம். நிறங்கள் கண்ணுக்குக் குளுமையாக இருந்தன. அறைக்குள் நுழைந்ததுமே, அவளுக்கு ஒரு தன்னம்பிக்கை வருவது போல் இருந்தது.

'' என்ன விஷயம், எதற்காகத் தேடிக் கொண்டு வந்திருக்கிறாய்?.... வீட்டில்....?'' என்று அவர் தயங்கினார்.

அவள் மணியைப் பார்த்தாள். அவளை உள்ளே அழைத்துக் கொண்டு வந்தவன், நின்று கொண்டிருந்தான்.

கபூரும் மணியை அர்த்தத்துடன் பார்த்தார். அவன் அதைப் புரிந்து கொண்டு வெளியே சென்றான்.

''ஹூம்... சொல், என்ன விஷயம்....?'' அவர் குரலில் இலேசாக ஓர் அச்சம் தொனிப்பது போல் அவளுக்குப் பட்டது.

'' உங்கள் ஆபீஸ் நேரத்தில் என் அந்தரங்க விஷயம் பற்றிப் பேச வந்ததற்கு மன்னியுங்கள்.....'' என்று ஆரம்பித்தாள் விஜயா.

''உன் அந்தரங்க விஷயமா ?''

''மிஸஸ் கபூர் என்னை வேலையைவிட்டு நீக்கிவிட்டார்கள். எனக்குப் பெரிய குடும்பம்.... உங்களுடைய பெருந்தன்மையில் நம்பிக்கை வைத்து நான் வந்திருக்கிறேன். வேறு ஏதாவது வேலை கிடைக்க நீங்கள் உதவினால்.''

''மோகினி ஏன் உன்னை வேலையைவிட்டு நீக்கிவிட்டாள் ? நீங்கள் நேற்றிரவு என்னைத் தேடிக் கொண்டு போன போது அந்நியோன்யமாகத்தானே இருந்தீர்கள் ?''

''மிஸஸ் கபூர் கொடுத்த சம்பளம் எனக்கு மிகவும் தேவையாக இல்லாமலிருந்திருந்தால் நிச்சயமாக நேற்றிரவு அவருடன் நான் போயிருக்க மாட்டேன். படி அளக்கின்றவர்கள் வற்புறுத்திக் கூப்பிடும் போது, அதை மறுத்துப் பேச, ஏழைகளுக்கு உரிமை இருக்கிறதா ? நள்ளிரவில், பழைய தில்லியிலிருந்த அந்த விடுதிக்குப் போய், மிஸ்டர் ரத்தன்லாலுக்காக நாங்கள் காத்துக் கொண்டிருந்ததை நான் ரசித்தேன் என்று நினைக்கிறீர்கள்? இது காருக்கே பிடிக்கவில்லை!. மக்கர் செய்து, அங்கேயே நின்றுவிட்டது....''

கபூர் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவளை ஆரம்பத்திலிருந்தே அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. கெட்டிக்காரப் பெண். பாவம், மோகினியிடம் வந்து மாட்டிக் கொண்டிருக்கிறாளே என்று அவர் அடிக்கடி நினைக்காமலிருப்பதில்லை. நன்றாக இங்கிலீஷ் பேசுகிறாள்..... அழகாகவும் இருக்கிறாள்..... தென்னிந்தியப் பெண்களுக்கே உரிய அடக்கம் வேறு....

'காருக்கும் பிடிக்கவில்லை, அது 'மக்கர்' செய்து விட்டது' என்று அவள் சொன்னதும் அவருக்கு வேடிக்கையாக இருந்தது. சிரித்தார். ''மோகினி உன்னை ஏன் வேலையை விட்டு அனுப்பினாள் என்பதற்குக் காரணம் சொல்லாமல் வேறு ஏதேதோ சொல்லிக் கொண் டிருக்கிறாயே?''

எப்படிச் சொல்வது? — மனத்துக்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டாள்.

''மிஸ்டர் ராகேஷ் என்னை விரும்புகிறார் போலிருக்கிறது. அது சத்தியமாக எனக்கு இன்று காலைவரை தெரியாது. அவர் இதை நேரடியாக என்னிடத்தில் வந்து சொன்ன போது மிஸஸ் கபூர் வந்து விட்டார். அம்மாவிடமும் இதைப் பற்றிச் சொல்ல ராகேஷ் தயங்கவில்லை....''

ராகேஷுக்கு என்ன ஆகிவிட்டது? நேற்றிரவு தமக்காக அம்மாவிடம் அப்படிச் சண்டை போட்டான்? இன்று....! மோகினி காளியாகி யிருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. அவள் கட்டிக் காக்கும் 'அந்தஸ்து மாளிகை' சின்னாபின்னமாகிக் கொண்டு வருகிறது!

(தொடரும்)

---



'' அரை மணி நேரமாச் சண்டை போடறுங்கன்னு சொல்றியே, ஏன் அப்போ என்னைக் கூப்பிடலே ?''

'' அரை மணி நேரமா எங்கப்பா கைதான் ஓங்கி யிருந்தது!'' — கோ.





# இப்படியும் ஒரு பெண்

**ப**த்மஸ்ரீ பானுமதி ராமகிருஷ்ணாவின் நடிப்பாற்றல், சங்கீதத் திறமை, டைரக்ஷன் அனுபவம் அனைத்தையும் ஒருங்கே காட்டும் படம் பரணி பிக்சர்ஸாரின் ''இப்படியும் ஒரு பெண்''. ''ஸரிகமப பாட்டுப் பாடுங்க'' என்ற பானுமதியின் இனிமையும் லய சுத்தமும் கொண்ட பாட்டுடன் ஆரம்பமாகும் முதல் காட்சியே களை கட்டி விடுகிறது. இறுதிவரையில் திரைக்கதையில் விறுவிறுப்பு இருக்கிறது. கள்ளங்கபடற்ற வெள்ளை உள்ளமும் கண்டிப்பான சுபாவமும் கொண்ட சாவித்திரி (பானுமதி)தான் படத்தின் கதாநாயகி; விவாக வயதைத் தாண்டியவள்; தன் தங்கையைப் பேணி வளர்க்கும் அன்பு ஒன்றே போதும். துணிச்சலும் திருட்டுப் புத்தியும் கொண்ட செல்லம்மா (மனோரமா) திரைக் கதையின் சுவாரஸ்யமான திருப்பம். சாவித்திரியின் தங்கையாக வரும் குமாரி பத்மினிக்கு நல்ல சான்ஸ். பரதநாட்டியம் ஆடவும் வாய்ப்புக் கிட்டியிருக்கிறது.

மனோரமாவின் நடிப்புத் திறமை நன்றாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சாவித்திரியாக வரும் பானுமதியும், மனோரமாவும் வரும் காட்சிகளெல்லாம் மிகவும் சுவையாகப் புனையப்பட்டிருக்கின்றன. மனோரமாவின் திறமை ஒவ்வொரு கட்டத்திலும் பளிச்சிடுகிறது. திருடிவிட்ட சந்தர்ப்பங்களில் கையும் களவுமாகப் பிடிபடும்போது மனோரமா பார்க்கும் பார்வையும், சிரிக்கிற சிரிப்பும் அப்பப்பா! மனோரமாவின் நடிப்பில் நவரஸங்களையும் காண முடிகிறது. பானுமதி செல்லம்மாவின் திருட்டை அநாயாசமாகக் கண்டு பிடித்துக் கண்டிக்கும் காட்சிகள் ரசிகர்களின் கையொலியைப் பெறுகின்றன.

கே. ஏ. தங்கவேலுவும், நாகேஷும் நகைச் சுவைக்கு முழுப் பிரதிநிதிகளாயிருக்கின்றனர். ஆபீஸில் ஒரு பெண்ணிடம் வம்பு செய்து பானுமதியிடம் அகப்பட்டுக்கொண்டு விழிக்கும் கட்டம் தங்கவேலுவின் நடிப்புக்குக் கட்டியம் கூறுகிறது. சங்கீத வித்வானாக வந்து நாகேஷ் அமர்க்களப்படுத்துகிறார். அந்தக் காட்சி ரசமாயிருக்கிறது.

அநாதைப் பள்ளிக்கூடத்திலும் சிவப்பு விளக்குப் பிராந்தியத்திலும் நடக்கும் அக்கிரமங்களையும் அநியாயங்களையும் வெளிச்சம் போட்டுக் காட்டிப் படம் சிறந்த சமூக சேவை செய்கிறது.

இந்தப் படத்தில் நடிப்பவர்கள் அனைவருக்கும் சம வாய்ப்பு அளிக்கப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது.

புரட்சியும், புதுமையும் கொண்ட இப்படத்தில் காதலுக்கு இடமில்லையோ என்று யாரும் நினைக்க வேண்டாம். சிவகுமார்—குமாரி பத்மினி இருவரும் ரகசியமாகக் காதலித்துச் சக்கைப் போடு போடுகின்றனர். இது போதாக் குறைக்கு 'போதும் போதும்' என்று சொல்லும் அளவுக்கு 'டிஷ்யூம் டிஷ்யூம்' சண்டைகள் இருக்கின்றன.

ஆரூர் தாஸின் வசனம் திரைக் கதைக்குச் சுவையூட்டியிருக்கிறது. லக்ஷ்மண் கோரேயின் ஒளிப் பதிவு படத்துக்கு ஒளியூட்டியிருக்கிறது. புதிய பின்னணிப் பாடகி வசந்தா எஸ். பி. பாலசுப்பிரமணியத்துடன் இணைந்து பாடியிருப்பதில் வெற்றி பெற்றிருக்கிறார். பானுமதியின் ஹிந்துஸ்தானி மெல்லிசை மெட்டுப் பாடல் செவிக்கு விருந்தாய் இருக்கிறது.

ஸ்ரீகாந்த் வில்லனாக வருகிறார். குமாரி சச்சு அவருக்கு இரவல் தங்கையாக வந்து ஒரு புதுக் கதையையே படைக்கிறார்.

இனிய பாடல்களுக்கும் நல்ல நடிப்புக்கும் விறுவிறுப்பான திரைக் கதை அமைப்புக்கும் —''இப்படியும் ஒரு பெண்'' — 'அப்படியா?' என்று கேட்டு அதிசயிக்க வைக்கிறாள்!

—காந்தன்



# ஒரு தாவணி வாங்க!

...பீஷ்மன்...

ஆத்திரத்தில் மத்தியானம் கத்திவிட்டாளே தவிர இருட்டியதற்கு அப்புறமும் மாலதி வரவில்லை என்றபோது ஆண்டாளம்மாளுக்கு வயிற்றைக் கலக்கியது.

''என் கண் முன்னே நிற்காதேடீ; ஒழிஞ்சு போ!'' என்று அவள் திரும்பத் திரும்ப ஓலமிட்டபோது மாலதியால் பொறுத்துக் கொள்ளத்தான் முடியவில்லை.

தன்மீது தவறு ஏதும் இல்லை என்பதை நிரூபிக்க அவளும் எவ்வளவோ வாதாடிப் பார்த்து விட்டாள். அம்மா ஏற்றுக்கொண்டால்தானே?...

கடைசியில் அவளுக்கே சலித்துப் போய் விட்டது.

பொறுமை இழந்த நிலையில் ''போறேன் அம்மா! போயே போயிடறேன்!'' என்று சொல்லிவிட்டுத் தெருவில் இறங்கிப் போனவள்தான்.

இருட்டி விட்டது. பயங்கரத் தனிமையில் இருட்டில் இப்போது நினைத்துப் பார்க்கும் போது, அளவுக்கு மீறி மாலதியைத் தான் கோபித்துக் கொண்டு விட்ட தவறு அவளுக்குப் புரிகிறது.

நிலைமை கைமீறிப் போனபிறகு தோன்றுகிற உணர்வோ இது?

மாலதி எங்கே போயிருப்பாள்?

''போறேன் அம்மா! போயே போயிடறேன்...!'' என்று கத்திக் கொண்டே ஊரைத் தாண்டி, ரயில்வே லைனைத் தாண்டிப் பெரிய ரோட்டில் மாலதி ஓடிக் கொண்டிருக்கிறாற் போல ஒரு பிரமை! அசட்டுப் பெண் அப்படி ஏதாவது செய்து விடுமோ...?

'கூ....' என்று தூரத்தில் ஓலமிடும் ரயிலின் ஒலி உயிரைக் குடைகிறது!

தெரு நாய் எங்கிருந்தோ நீளமாக ஊளையிடுகிறது. அவளுக்கு இப்போது வயிற்றைப் பிசைகிறது.

தேரோட்டம் முடிந்து அவர் வீடு திரும்பும்போது மணி பத்துக்கு மேலாகி விடும். அதுவரைக்கும் அவள் வராமல் இருந்து விட்டால்....? அவரிடம் என்ன சொல்வது?

''போயே போயிடறேன்!'' என்று மாலதி கூறியபோது ஆண்டாளம்மாள் அதை அவ்வளவு 'ஸீரியஸ்ஸா'க எடுத்துக்கொள்ளவில்லை. ஆயின் மணி ஏழாகியும் அவளைக் காணவில்லை என்கிறபோது — அவள் அதை மிகவும் உணர்ந்துதான் கூறினளோ என்று தோன்றுகையில்....

ஈசுவரா, இது என்ன சோதனை!

இந்த இருட்டில் எங்கே போய்த் தேடுவது? என்ன சொல்லித் தேடுவது?

ஆண்டாளம்மாளுக்கு இப்போது நெஞ்சில்கருக்கென்று ஏதோ குத்தியது.

''வேறே யாரானும் இப்படியெல்லாம் சொன்னால்கூடப் பொறுத்துக் கொள்வேன் அம்மா!'' என்று சொல்லிக் கொண்டு மாலதி கேவிக் கேவி அழுத காட்சி கண் முன் நின்றது.

ஆமாம். அம்மாவே இப்படித் திட்டி விட்டாளே என்பதைத்தான் அவளால் தாங்க முடியவில்லை.

''சும்மா அபாண்டமாப் பேசாதே அம்மா. நேத்துச் சாயந்திரம் பள்ளிக்கூடம் விட்டு வரப்போ, ரயில்வே கேட்டண்டை இந்தப் பத்து ரூபாய் கிடந்ததம்மா. யார் போட்டுட்டுப் போயிட்டாங்களோ? நான் மட்டும் தனியா வந்து கொண்டிருந்தேன். அதை எடுத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தேன். யாரையும் காணோம். எடுத்துண்டு வந்துட்டேன்.''

''அது சரிடீ! பின்னே ஏன் வந்த உடனே அதை என்கிட்டே சொல்லலே? காலையிலே கை தவறி உன் 'ஜாமெட்ரிபாக்ஸ்' கீழே விழுந்ததனால்தானே, அதில் நீ ஒளிச்சு வைச்சிருந்த இந்தப் பணம் என் கண்ணுக்குத் தெரிஞ்சுது! அதை நீ ஏன் ஒளிச்சு வைக்கணும்!'' என்று காளியாய் அம்மா மாறிக் கொண்டிருந்தாள்.

''வந்தவுடனே சொல்லணும்னுதாம்மா நினைச்சேன்! ஆனா நான் உள்ளே வரபோதே 'பால்காரிக்கு இன்னும் பணம் கொடுக்கலே நான் எங்கே போறது'ன்னு நீ 'ஓ'ன்னு கத்திண்டிருந்தாய். இந்தப் பணத்தை இப்போ கொடுத்தா இதுவும் கோவிந்தா ஆயிடப்போறதேன்னுதான் பேசாமல் இருந்துட்டேன். பொழுது விடிஞ்சப்புறம் சாவகாசமா உங்கிட்டச் சொல்லித் தாவணி

வாங்கிக்க அதை எடுத்துக்கலாம்னு இருந்தே னம்மா...!''

அம்மா ஏனோ அட்டகாசமாகச் சிரித்தாள்.

''ரொம்ப ஜோராக் கதை கட்டறியேடீ! உள்ளதைச் சொல்லு! ஏது பணம்? எவன் கிட்டே வாங்கினே?'' — அவளுக்கு ஏன் அப்படி வெறி வந்தது? தொடர்ந்து அவள் பேசிய பேச்சுக்களையும் ஏசிய ஏச்சுக்களையும் யார்தான் தாங்கிக் கொள்வார்கள்?

பருவம் அடைந்து விட்ட பிறகும், ஏழ்மையிலும் எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டு உடல் வளர்ந்து விட்ட நிலையில், தாவணி இல்லாமல் கூசிக் குறுகிக் கொண்டு வெளியே போய் வரும் மாலதி, ஒரு தாவணிக் காக எத்தனையோ முறை அம்மாவிடம் கெஞ்சிவிட்டாள்.

அவள் கொண்டு வரும் எழுபது ரூபாய்க் காசிலும் அப்பளம் இட்டு விற்பதால் கிடைக் கும் பணத்திலும் இந்த விலைவாசியில் சாப் பாட்டுக்கே திண்டாடுகையில்...

ஆண்டாளம்மாளின் விடியாத தரித்திரத் தில் மகளுக்குத் தாவணி வாங்கப் பணம் தேறவில்லை.

ஒருவேளை... மாலதி சொன்னதுதான் உண் மையாக இருக்குமோ...?

முந்திய நாள் அப்பளம் விற்கப் போன இடத்தில், அந்த வீட்டுப் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்ட செய்தி அவள் மனத்தை உறுத்திக் கொண்டிருந்த நிலையில், மாலதி இப்படிப் பணத்தை ஒளித்து வைத்திருப் பதைக் கண்டதும் வேண்டாத சந்தேகங்கள் கிளர்ந்து அவளுக்கு வெறியூட்டி விட்டன.

அந்த வீட்டுப் பெண் — அதுவும் பள்ளிக் கூடத்தில்தான் படித்துக் கொண்டிருந்தது— யாருடனோ ஓடிப் போய் விட்டதாம்! மூன்று நாட்களாகிறதாம்!

அந்த நினைப்பு என்னென்னமோ விபரீத மான கற்பனைகளை ஆண்டாளம்மாளின் நெஞ்சில் தூண்டி விட்டது. அதன்பயனாய்...

''கதை கட்டாதேடீ கழுதை! பத்து ரூபாய் நோட்டைக் கீழே கிடந்து எடுத் தாளாமே! — இந்த வீட்டு வாசப்படி மிதிக் காதே! ஒழிஞ்சு போ! முனிசிப்பாத்துப் பொண்ணு மாதிரி நீயும் போயிடு...!''

அழுகையைச் சட்டென்று அடக்கிக் கொண்டு அம்மாவை நிமிர்ந்து பார்த்தாள் மாலதி. ''நீ என்னை நம்பலை இல்லே? — நான் போறேன். போயே போயிடறேன்!''

''என்னடீ பூச்சாண்டி காட்டறாய்...?''

பேயாய் அம்மா அறைந்த அடியைத் தாங்கிக்கொண்டு, தெருவில் இறங்கி நடந்து விட்டாள் மாலதி.

மணி எட்டுக்கு மேல் இருக்கும் என்று தோன்றியது. அடுத்த தெருவில் மாலதி யுடன் படிக்கும் பானுவின் வீடு இருக்கிறது. அங்கே போய் விசாரிக்கலாமா?

'என்னன்னு விசாரிப்பது?' என்று மனம் கேட்டுக் கொண்டிருக்கும்போதே கை கதவை இழுத்துப் பூட்டி விட்டது.

விடு விடென்று பானுவின் வீட்டை நோக்கி நடந்தாள். ''இன்னிக்குப் பூரா நான் அவ ளைப் பார்க்கலையே, மாமி!'' என்று ராகம் பாடிவிட்டாள் அவள்.

''இருட்டி இவ்வளவு நேரமாச்சு. இன்னும் வரக் காணோம். யார்வீட்டிலே போய் உட் கார்ந்திண்டிருக்கோ'' — என்று ஒப்புக்கு ஏதோ முனகிக்கொண்டே திரும்பிவிட்டாள்.

நேரம் ஆக ஆக அவளுக்கு வயிற்றை என்னவோ சங்கடம் செய்தது.

''ஏய்! கதவைத் திறந்து போட்டுட்டுத் திண்ணையிலே உட்கார்ந்து தூங்கறியா?''

ஐயோ, அவர் வந்து விட்டாரா?

பதறிப்போய் எழுந்து உள்ளே போய், சிம்னி விளக்கின் திரியையுயர்த்தி விட்டு நின்றாள் ஆண்டாள்.

''ஜலம் கொடு.''

ஒன்றுமே நடக்காதது போல், உள்ளே போய்த் தண்ணீர் கொண்டு வந்து டம்ளரை அவர் கையில் கொடுத்தாள்.

எப்படி ஆரம்பிப்பது?

அவளுக்கு ஏனோ அழுகைதான் வந்தது.

''ஏன்...? என்ன நடந்தது....?''

''மத்தியானத்திலிருந்து மாலதி வீட் டுக்கு வரலை!''

''எங்கேடீ போனா அப்படி....? மணி பத்தாறதே! என்னதான் நடந் தது? சொல்லித் தொலையேன்...''

அழுது கொண்டே நடந்தவற்றை அவரிடம் அவள் சொன்னபோது, அவர் எரிமலையாய்க் குமுறினார்.



## வரசித்தி விநாயகருக்கு மகாகும்பாபிஷேகம்

செங்கல்பட்டு மாவட்டம் காட்டாங்குளத்தூர் ஸ்டேஷனுக்கருகிலுள்ள பனங்கோட்டூர் கிராமத்தில் வரசித்தி விநாயகரை ஆஸ்திக அன்பர்கள் பிரதிஷ்டை செய்து ஜூன் 18ந் தேதி அஷ்ட பந்தன மகாகும்பாபிஷேகம் நடத்தவிருக்கிறார்கள். இவ்வாலயத்தில் ஸ்ரீ புவனேஸ்வரி, தத்தாத்ரேயர், ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மர், நவக்கிரகங்கள் முதலிய மூர்த்திகளையும் பிரதிஷ்டை செய்யவிருக்கிறார்கள். இந்தத் திருப்பணி காஞ்சி ஆசார்யாளின் பரிபூர்ண ஆசியைப் பெற்றுள்ளது. இந்தத் திருப்பணிக் கைங்கர்யத்துக்கு உதவ விரும்புபவர்கள் ஸ்ரீமதி எம். எஸ். லக்ஷ்மியம்மாள், நிர்வாக டிரஸ்டி, பனங்கோட்டூர் P.O. காட்டாங்கொளத்தூர், செங்கல்பட்டு ஜில்லா என்ற விலாசத்துக்கு நிதி அனுப்பலாம்.

''என்ன ஏதுன்னு விசாரிக்காம அவளை அடிச்சுத் துரத்திட்டு நிக்கிறயே... இப்போ எங்கே போய்த் தேடறது?''

என்ன சொல்வது, என்ன செய்வது என்று தெரியாமல் அவர் தவித்துக் கொண்டிருக்கையில், வாசலில் யாரோ ''சாமிநாதய்யர்...!'' என்று கூப்பிட்டார்கள்.

''யாரு....? இப்படி வாங்கோ!''

சிம்னி விளக்கின் மங்கிய ஒளியில் வந்திருப்பது யார் என்று புரிந்து விட்டது. மாலதி படிக்கும் பள்ளிக்கூடத்தின் தமிழாசிரியர் அவர். பெரிய தெருவில் இருக்கிறது அவர் வீடு.

''உங்க பெண் பத்திரமா இருக்கா. கவலைப்படாதேங்கோ!''

தெய்வமே வந்து நல்ல சேதி சொல்கிறதோ! — எத்தனை இதமாக இருக்கிறது!

''டவுனுக்குப் போயிருந்தவன் இப்பத்தான் வந்தேன். வீட்டிலே உங்க பெண் படுத்துத் தூங்கிண்டிருந்தா. இந்த நேரத்திலே இவ எங்கேடி வந்தான்னு கேட்டா, எங்க வீட்டிலே ஒரு கதையைச் சொல்றா!''— என்று ஆரம்பித்தவர், அவர் கேட்ட அந்தக் கதையை அவர்களுக்குக் கூறினார்.

வீட்டிலே கோபித்துக் கொண்டு கிளம்பிய மாலதி ஒரு குறிக்கோளும் இல்லாமல் அழுதழுது சிவந்த கண்களுடன் பெரிய தெருவைத் தாண்டி நடந்து கொண்டிருக்கையில், தமிழாசிரியரின் மனைவி பார்வதத்தம்மாள் வழியில் அவளைப் பார்த்திருக்கிறாள். மாலதியிடம் அந்த அம்மாளுக்கு எப்போதுமே ஓர் ஈடுபாடு உண்டு. அவர்கள் வீட்டுக்கு மாலதிதான் வழக்கமாக அப்பளம் கொண்டு போய்க் கொடுப்பாள். அவளது முகத்தைப் பார்த்துவிட்டு, ''என்ன மாலதி இது? அழுதாயா என்ன?'' என்று ஆதரவாகக் கேட்டிருக்கிறாள். அந்த ஆறுதல் வார்த்தை மாலதியின் துக்கத்தைக் கிளறிவிட்டு விட்டது. நடுத்தெரு என்றுகூடப் பாராமல் 'ஓ'வென்று அழுதேவிட்டாளாம். அவள். எப்படியோ சமாதானப்படுத்தி வலுக் கட்டாயமாக அவளை வீட்டுக்கு அழைத்து வந்து எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டாளாம்.''

''நான் வந்து உன் அம்மாவிடம் சொல்றேன் மாலதி வா'' என்று கூப்பிட்டிருக்கிறாள்.

''நான் வரமாட்டேன், மாமி... எங்கம்மா என்னை ரொம்ப மோசமா நினைச்சுட்டா!'' என்று முரண்டு பிடித்திருக்கிறாள் மாலதி.

எப்படியோ கட்டாயப்படுத்தி அவளைச் சாப்பிட வைத்து விட்டாளாம். உண்ட களைப்போ, அழுத களைப்போ மாலதி தூங்கிப் போய்விட்டாள்.

''மணி இப்போ பத்தாயிடுத்து. அவளை எழுப்பி ஒண்ணும் கலாட்டாப் பண்ண வேண்டாம். போய் அவள் அப்பா அம்மா கிட்டே தகவல் சொல்லிட்டு வாங்கோன்னு என்னை அனுப்பினாள். நீங்க பொழுது விடிஞ்சதும் வாங்கோ. அவளைச்சமாதானப்படுத்திஅழைச்சுண்டு வந்துடலாம். எந்தத் தப்புத் தண்டாவுக்கும் போகிற பெண்ணில்லே அவள். ஏதோ வழியிலே கண்டெடுத்த பணத்தைத் தாவணி வாங்க வச்சுக்கலாமேன்னு நினைச்சிருக்கா. உங்க வீட்டிலே அவளை அப்படிப் பேசியிருக்கப்படாது. ரொம்ப மானியான பெண் மாலதி. துடிச்சுப் போயிட்டா!'' என்றார்.

''நான் இப்பவே வரேனே!'' என்று கிளம்பினார் சாமிநாதய்யர்.

''இல்லே. வேண்டாம். அந்தப் பெண் ரொம்பவும் நொந்து போயிருக்கிறாள். தூக்கத்தில் எழுப்பி அனாவசியக் கலாட்டா ஏற்படுத்த வேண்டாம். காலையிலே எழுந்த உடனே வாங்கோ!'' என்று அவரைத் தடுத்து நிறுத்திவிட்டார் தமிழாசிரியர்.

இரவு முழுக்க மனைவிக்கு அர்ச்சனை பண்ணிக்கொண்டிருந்தார் சாமிநாதய்யர்.

பொழுது விடிந்ததும் விடியாததுமாகப் பல்லைத் தேய்த்து விட்டுப் பெரிய தெருவை நோக்கி ஓடினார் அவர். ஆண்டாளம்மாளும் கதவைப் பூட்டிவிட்டு அவருடன்கிளம்பினாள்.

தமிழாசிரியர் அவர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார்.

''வாங்கோ! இன்னம் எழுந்திருக்கவில்லே அவள்! எழுப்பிச் சமாதானமாப் பேசுங்கோ'' என்று சொல்லிக் கொண்டே அவரும் உள்ளே வந்தார்.

''மாலதி....மாலதி...!''

மாலதி எழுந்திருக்கவில்லே.

ஒருக்களித்துப் படுத்திருந்தவளைத் தொட்டுப் புரட்டியபோது அவள் கரம் துவண்டு விழுந்தது. ''மாலதீ...!'' என்று வீடே அதிரும்படி அலறினார் சாமிநாதய்யர்.

''பாதி ராத்திரி கண்ணை முழிச்சுண்டவ 'ஜலம் வேணும்'னு கேட்டா. எடுத்துக் கொடுத்தேன். குடிச்சுட்டு மறுபடியும் படுத்துண்டாளே...!'' என்று பார்வதத்தம்மாள் கூறிக்கொண்டிருந்தாள்.

''நான் போறேன்... போயே போயிடறேன்' என்ற மாலதியின் குரல் இடி முழக்கமாய் ஆண்டாளம்மாளின் செவியில் அறைவதாக அவளுக்குத் தோன்றியது.

'ஹார்ட் அட்டாக்' என்று டாக்டர் மாலதியின் முடிவுக்குப் பெயர் சொன்னார்.

''இல்லே. என் பெண்ணை நான்தான் கொலை பண்ணிவிட்டேன். அவள் சாகலே. நான் சாகடிச்சுட்டேன்!'' என்று ஆண்டாளம்மாள் புலம்பிக் கொண்டிருக்கிறாள்.



# இப்போது!
# வறுத்தெடுக்கும் கோடை நாட்களில் குளுமையாகப் புதுமலர்ச்சியுடன் விளங்குங்கள்

மற்றொரு மின்வெட்டு! இக் கோடை மிகவும் கடுமையாகவும், வெப்பமாகவும், இருக்கப்போகிறது. ஆனால் கவலைவேண்டாம்: அப்போது குளுமையாகப் புது மலர்ச்சியுடன் விளங்கிட இதோ ஒரு புதிய வழி. நீங்கள் குளித்தவுடன் உடம்பு முழுவதும் ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரைத் தூவிக்கொள்ளுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரில் மட்டுமே அடங்கியுள்ள **மென்தால்** உங்களுக்குக் குளுமையும் புதுமலர்ச்சியும் அளித்து, கோடையில் உரசுவதால் ஏற்படும் புண்ணிலிருந்தும், வேர்க்குரு-விலிருந்தும் உங்கள் சருமத்திற்கு சுகமளிக்கிறது.

கோடைகால நாட்களைக் குளுமையுடன் கழியுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட பவுடர் உபயோகியுங்கள்.




OBM 4320

# ஜான்ஸன்ஸ்*
# மென்தொலேட்டெட் பவுடர்

75 கோடையில் மென்தால்-குளுமை தரும் ஒரே பவுடர்.

* Trademark © J&J 75

Johnson & Johnson®

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.

1. மேற்புற அறைக்குள் ஊற்றப்படுகிறது குழாய் நீர்.

2. ஆய்வுக் கூடத்தில் பரிசோதனை பெற்ற கேண்டல் ஃபில்ட்டர் எல்லாக் கிருமிகளையும் நீரிலிருந்து வடிகட்டி ஒதுக்கிவிடுகிறது.

3. இணைப்புத் தடமற்ற, இரசாயனப் பொருள்களை எதிர்க்கும் தன்மையுள்ள, கீறல் விழ முடியாத எபாக்ஸி-பூசகப் பெற்ற அலுமினியம் அறை.

4. கீழ்ப்புற அறையினுள் நூற்றுக்கு நூறு தூய நீர் குடிக்கத் தயாராகத் திரண்டிடும்.

உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள். இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்.

அசல் ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்களையே வாங்குகிறீர்கள் என்பதை உறுதி செய்ய மேற்புற அறைக்கு மேலுள்ள ப்யூரிடாஸ் முத்திரையைப் பார்த்து வாங்குங்கள். ப்யூரிடாஸ் பெயருடன் பதிவு எண் 196501ம் அடிப்புற உலோகத்தின் மீது இருப்பதையும் கவனியுங்கள்.



ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது, தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.



இலவசக் கைப்புத்தகத்திற்கு எழுதுக:

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.
43, நகின்தாஸ் மாஸ்டர் ரோடு, பம்பாய் 400 001.

CHAITRA BLS19 TAM Rev.












1. மயிலையில் நீண்ட காலமாகக் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீமந் நிகமாந்த தேசிகன் சன்னதியில் கலியுகக் கடவுளான ஸ்ரீநிவாசப் பெருமாளும் அலர்மேலு மங்கைத் தாயாரும் எழுந்தருளியிருக்கிறார்கள். ஆசாரியாள் கோயிலில் பகவான் எழுந்தருளியிருப்பது புதுமை. ஏழு லட்சம் ரூபாயில் இந்தக் கோயில் புதுப்பிக்கப்பட்டு, முதல் தடவையாகத் தாயார், பெருமாள் சன்னதிகளில் விமானங்கள் அமைக்கப்பட்டு அண்மையில் மகா சம்ப்ரோக்ஷணம் விமரிசையாக நடந்தது.

2. புதுதில்லி கமானி அரங்கில், குமாரி ருக்மிணி சீதாராமனின் பரத நாட்டிய அரங்கேற்றம், ஸ்ரீமதி அபீதா பேகம் (பாரத ஜனாதிபதியின் மனைவி) அவர்களின் தலைமையில் விமரிசையாக நடந்தது.

3. 'போல்ட் வால்ட்'டில் உலக ரிகார்டை ஏற்படுத்தியுள்ளார் இருபத்து மூன்று வயதான அமெரிக்க டேவ் ராபர்ட்ஸ். கோலின் உதவியுடன் இவர் தாண்டிய உயரம் 18 அடி 6½ அங்குலம்.

4. புதுதில்லியில் ராஷ்டிரபதி பக்ருதீன் அலி அகமது திருவள்ளுவர் சிலையைத் திறந்து வைக்கிறார். தமிழ்நாடு வள்ளுவர் கலை மன்றத்தின் ஆதரவில் நடைபெற்ற இவ்வைபவத்துக்குத் தமிழக அமைச்சர் திரு ராஜாராம் ஏற்றுக்கொண்ட முயற்சி பாராட்டுக்குரியது.

படம்: தில்லி ராஜு

5. ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி நாட்டியக் கலாமந்திரின் மாணவியும், ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' நிறுவனத்தின் பொதுஜனத் தொடர்பு அதிகாரி ஸ்ரீ கே.ஏ. நாராயணன் அவர்களின் குமாரத்தியுமான செல்வி ராதிகா நாராயணனின் பரத நாட்டிய அரங்கேற்றம் பம்பாயில் புலாபாய் தேசாய் அரங்கில் வெகு சிறப்பாக நடந்தது. அரங்கேற்றத்துக்கு விஜயம் செய்திருந்தவர்களில், பம்பாய் நிதி அமைச்சர் எம்.டி. சௌத்ரி, ரிஸர்வ் பாங்க் கவர்னர் எஸ். ஜகந்நாதன், பிரபல பின்னணிப் பாடகி லதாமங்கேஷ்கர் ஆகியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.



டாக்டர்கள் கூறுகிறார்கள்:

# 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**

உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம். கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்.

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3 – 6 மாதங்கள் | 1 – 2 தேக்கரண்டியளவு – தினம் இருமுறை |
| 6 – 9 மாதங்கள் | 3 – 4 தேக்கரண்டியளவு – தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள் – 3 ஆண்டுகள் | 4 – 6 தேக்கரண்டியளவு – தினம் நான்கு முறை |




உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக: டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 400 025 (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**

கிளாக்ஸோ தயாரிப்பு!



சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு

CMGF-42-104 TM

# அரிசி புராணம்

ராஜு

அரிசி என்றால் என்ன என்று உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. கொட்டும் மழையிலும், ஜொலிக்கும் வெயிலிலும் நின்று, இரண்டு மூன்று தினசரிகளைப் படித்துத் தீர்த்துவிட்டு, வரும் டீக்காரனிடம் டீ வாங்கிச் சாப்பிட்டுவிட்டுச் சில மணி நேரங்கள் ஒற்றைக் காலில் க்யூவில் தவம் செய்து கிடைக்கும் பொருளை நீங்கள் சொப்பனத்தில் பார்க்கும்பொழுது, அப்பொருளைப் பற்றி இப்படிக் கேள்வி கேட்பது ஒரு முட்டாள்தனம். இருந்தாலும் எத்தனையோ பெரியவர்கள் செய்யும் முட்டாள்தனங்களையெல்லாம், பாராட்டும் உங்களுக்கு இதையும் பாராட்ட முடியாமல் போகாது என்று நம்புகிறேன்.

விலை என்பதைப் பற்றி உங்களுக்குத் தெரியாததல்ல. முன்னொரு காலத்தில், அதாவது, நான்கு யுகங்களும் சேர்ந்த காலத்தில், பூமி தேவியானவள் மகாவிஷ்ணுவினிடம் பிரார்த்தித்துக் கொண்டாள். ''பிரபோ! ஈரேழு பதினான்கு லோகங்களும் க்ஷேமத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக அவ்வப்போது அசுரர்களைத் தோற்றுவித்தீர்கள். ஆனால் அசுரர்களோ மகா பயங்கரவாதிகளாக மாறி நல்லவர்களைச் சிறையிடுவதும், ஸ்திரீகளைச் சூறையாடுவது போன்றும், முறையற்ற காரியங்களில் ஈடுபட்டு, மகா பாவங்களைச் செய்கிறார்கள். ஆகவே, பாபம் செய்யாத ஏதாவது ஓர் அசுரனைப் படைத்து ரட்சிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டாள்.

இந்த வேண்டுகோளுக்கிணங்கிய மகாவிஷ்ணு, என்ன செய்வதென்று தெரியாமல் விழிக்கும்போது, திரிலோக சஞ்சாரியான நாரதர் அங்கே வந்தார். தாம் எந்தவிதமான கலகமும் செய்யாதபோது, மகாவிஷ்ணு கலக்கம் அடைந்திருப்பதைக் கண்டு, ஏதும் பேசாமல், எல்லாத் தேவர்களையும் ஒருங்கே அழைத்து மகாநாடு கூட்டி மகாவிஷ்ணுவின் கலக்கத்துக்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி ஆராய ஒரு கமிட்டி அமைத்தார்.

அந்தக் கமிட்டியின் தலைவரான பரமேசுவரனின் சிந்தனை மேலே மேலே போயிற்று. இதை மகாவிஷ்ணுவிடமே சென்று, 'அப்பனே! உன்னைப் பற்றிச் சிந்தனை மேலே போகிறது. அதை இறக்க உன் கவலை என்னவென்று சொல்வாயாக' என்று கேட்டார்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட மகாவிஷ்ணு மகா சந்தோஷம் அடைந்து, மேலே போகும் வஸ்து ஒன்றைப் படைத்து, பரமேசுவரனுக்குப் பூமிதேவியின் பிரார்த்தனை உள்பட எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னார். இதைக் கேட்ட பரமேசுவரன் பூரித்துப் போனார். மேலே மேலே போகக்கூடிய அந்த வஸ்துவின் பெயரை ''விலை'' என்று நாமதேயம் கொடுத்தார். அதைப் பூமிக்குச் செல்லும்படி உத்தரவிட்டார்.

இந்தப் புராண முக்கியத்துவம் வாய்ந்த விலையானது, மேலே மேலே போய், மக்களை வாட்டுகிறது. விலை என்றால் என்ன என்பதைத் தெளிவுபடுத்த அரிசி புராணத்திலிருந்து சில பகுதிகளை இங்கே கொடுத்திருக்கிறேன்.

இவ்வாறு அரிசிக்கும் விலைக்கும் நேரடி சம்பந்தம் இருப்பதால், அரிசியைத் தவளைக்கும், விலையை எலிக்கும் ஒப்பிட்டு, இரண்டுக்கும் கல்யாணம் செய்து பார்த்தால், அரிசி ஒரு பக்கம் இழுக்க, விலை ஒரு பக்கம் இழுக்க, மத்தியில் மக்கள் அவதிப்படுகிறார்கள். இந்த அவதியைத் தீர்க்க யாரும் கவலைப்படவில்லை. ஆகவே, இந்த அவதி தீர்ந்தவுடன், நானும் இதைப் பற்றி எழுதலாம் என்று சிந்தனை செய்து கொண்டிருக்கையில், யாரோ ஒருவர் மயிலாப்பூர் குளத்தின் அருகில் அரிசி மலிவாகக் கிடைக்கிறது என்று சொன்னது என் காதில் படுகிறது.

ஆகவே, நான் பையும் கையுமாக ஓடிக் கொண்டிருக்கிறேன்.

—ராஜு






# அரசாங்கத் துறை

என்னைக் கேட்டால், ''வெற்றிலை பாக்குக் கடைகளைக்கூடத் தேசிய மயமாக ஆக்க வேண்டும்'' என்று சொல்வேன்; அவ்வளவு தீவிரமான சோஷலிஸ்ட் நான்.

வோட்டுக்களை எதிர்பார்த்தோ கம்யூனிஸ்டுகளின் கூட்டுகளை எதிர்பார்த்தோ நான் சோஷலிஸ்ட் ஆனவனல்ல.

ஜனத்தொகை அதிகமுள்ள ஒரு நாட்டுக்கு அதுதான் நல்ல மருந்து என்று கருதுகிறவன் நான்.

துரதிர்ஷ்டவசமாகத் தேசியமயக் கொள்கை படுதோல்வி அடைந்து வருவதை நான் கண்ணாரக் கண்டு கொண்டிருக்கிறேன்.

அரசாங்கத் துறை என்றாலே ஏமாளித்தனமாக ஆரம்பிக்கப்பட்ட — பிறர் ஏமாற்றுவதற்கு வசதியான துறை என்றாகிவிட்டது.

அரசாங்கத் துறை ஒன்று லாபம் தேடித் தந்ததாக நூறாண்டுகளில் ஒரு முறை எப்போதாவது பத்திரிகைகளில் பார்க்கும் சோஷலிஸ்டுகள் மகிழ்ச்சி அடைவது திண்ணம்.

இந்தத் தலைமுறையில் தமிழ்நாடு அரசாங்க 'பஸ் போக்குவரத்துத் துறை' லாபம் தந்தது மட்டுமே நான் பத்திரிகையில் படித்திருக்கிறேன்.

ஆனால் லாபகரமான அந்தத் துறையில் ஓடும் பஸ்கள் போகும் போக்கைக் கவனித்தால் இந்த லாபம் எதற்கு என்றும் தோன்றுகிறது.

எங்கேயாவது நடு ரோட்டில் ஒரு பஸ் நிற்பதைப் பார்த்தால், அது அரசாங்க பஸ் என்று நீங்கள் உடனே முடிவுகட்டிவிடலாம்.

அரசாங்க பஸ்களின் மூலம் கொல்லப்பட்டவர்கள் தொகை தமிழ்நாட்டு ஜனத்தொகையில் பத்தில் ஒரு பங்கு இருக்கும்!

பிறருக்கும் உயிர் இருப்பதாகக் கருதாத ஓர் இலாகா, அரசாங்க பஸ் போக்குவரத்து இலாகா!

அகில இந்திய அளவில் ஏராளமான தனி உடைமைகள் தேசியமயமாக்கப்பட்டிருக்கின்றன. அவை எவ்வளவு பெரிய தோல்வி அடைந்திருக்கின்றன என்பதற்கு அண்மைக் கால உதாரணம் ''பாங்குகள்''.

அரசாங்கத்தின் நோக்கத்தைப் புரிந்து கொண்டு பாங்கு நிர்வாகிகள் செயல்படுகிறார்கள் என்பது உண்மை. ஆனால், அரசாங்கத்தின் நோக்கத்தில் ஒரு தெளிவும் இல்லாமலிருப்பதற்கு அவர்கள் என்ன செய்வார்கள்!

மிகப் பெரிய உருக்குத் தொழிலில் இருந்து பாங்கித் தொழில் வரை வீணடிக்கப்பட்ட பணம் மிச்சம் இருந்தாலே பல வருஷங்களுக்குப் புது வரி போட வேண்டியதில்லை.

நன்மைக்காகத் தோன்றிய ஜனநாயகம் எவ்வளவு தீமைகளை வளர்த்து விட்டது? எவ்வளவு அநியாயங்களை மூடி மறைத்திருக்கிறது?

ஒரு வேலையும் செய்யாத எத்தனை பேர்களைப் பணக்காரர்களாக்கி விட்டது?

ஒழுங்காக வேலை செய்கிற எவ்வளவு பேர்களை ஒட்டாண்டியாக்கிவிட்டது?

ஒவ்வொரு பொருளும் அன்றாடம் விலை ஏறுகிற அழகுதான் என்ன?

காரணம் இருக்கிறதோ இல்லையோ, கடுகு கூட விலை ஏறுகிறது.

காரியம் புரிந்தாலும் விலை ஏற்றத்தைத் தடுக்க முடியாமல் அரசாங்கம் தடுமாறுகிறது!

ஐந்து வருஷங்களுக்கொரு முறை பெரிய மனிதனாகக் காட்சி தரும் சராசரி மனிதன் பாக்கி நாட்களில் படும் தொல்லையைக் கடவுள்தான் அறிவார்!

இப்படி எல்லாம் நான் சொல்வதனால் ஜனநாயகத்தையும், தேசிய மயக் கொள்கையையும் நான் எதிர்க்கிறேன் என்று பொருள் அல்ல.

எனக்கு இட்லி தேவை என்பதற்காக அதன் மீது வைக்கப்பட்ட சாணத்தையும் சேர்த்து நான் உண்ண முடியாது.

நோக்கங்கள் நல்லவை; ஆனால் தெளிவற்றவை.

தெளிவற்ற நோக்கங்களை அறிவற்றவர்கள் கையாளுகிறார்கள்.

தேர்தலில் ஜெயித்துவிட்ட ஒரே காரணத்தாலேயே மகத்தான துறையொன்றுக்கு மந்திரியாகிவிடும் யோக்யதை நமது மனிதனுக்கு வந்துவிடுகிறதே, அந்த அவகேட்டை என்ன சொல்ல!

நமது ஜனநாயகத்தின் அடிப்படையே பெரும் தவறு.

குறைந்தபட்சம் சில தகுதிகளையாவது வகுத்திருக்கலாம்.

சுகாதாரத் துறைக்கு மந்திரியாகிறவன், டாக்டராகத்தான் இருக்க வேண்டும்.

சட்டத் துறைக்கு மந்திரியாகிறவன், வக்கீலாகத்தான் இருந்தாக வேண்டும்.

முதல் மந்திரியாக வருகிறவர் மட்டும் எல்லோரையும் மேய்க்கக்கூடிய ராஜதந்திரியாக இருந்தால் போதும், என்றாவது ஆக்கியிருக்கலாம்.

ஒரு நியாயமும் இல்லாத நமது ஜனநாயகத்தில் தேசியமயக் கொள்கை உட்பட எல்லாக் கொள்கைகளும் தோல்வியடைந்துவிட்டன என்பதை வெட்கமின்றி ஒப்புக் கொள்வோம்.

முன்பொரு முறை நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் சொன்னது போல்: ''நமது அரசாங்கத்தையே ஒரு வருஷ காலத்துக்கு டி. வி. சுந்தரம் ஐயங்கார் அண்ட் சன்ஸ்ஸுக்குக் குத்தகைக்கு விட்டுப் பார்த்தால் என்ன!''

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# பெரியவளாகி உங்களை விட்டுப் பிரிந்த நெடுங்காலத்திற்குப் பின்பும் புகைப்படம் அவளை மறவாது.

REGISTERED No. M. 4592
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 60 சதம் (தபால் செலவு தனி)

# அன்புள்ள பாம்பே டையிங்

இந்நூற்றாண்டின் மிகச் சிறந்த
'பீட் ஷோ' வுக்கு மிகவும் பாடுபட்டு
ஒரு டிக்கெட் பெற்றுள்ளேன். கண்
கவர் உடைகளணிந்து அங்கு வரு-
வோர் எவ்வளவோ பேர்கள். அவர்
களிடையே நான் மிகமிக விசேட
மாகத் தோற்றமளிக்க விரும்புகிறேன்.
அதற்கு நீ உதவுவாயா?

நிச்சயமாக! ஸ்ட்ராபெர்ரி பிங்க் ஜீன்-
ஸும் அதன்மேல் அழகிய பிரிண்டெட்
டாப்பும் ஒரு இணையற்ற ஜோடியாகும்.
நீயும் பாம்பே டையிங்கும் எழில் வீசி
இன்பகீதம் பாடி மகிழலாம்!

பாம்பே டையிங்கின் எங்கும் அணிந்து
மகிழக்கூடிய துணித்தரங்கள்:

ஸூப்பர்ஃபைன் பாப்ளின் • லான்
கெம்ப்ரிக் • ரூபியா, 12 நவீன
வண்ணங்களில் ப்ரஷ்ட் டெனிம்கள்
100% பாலியெஸ்டர் ட்ரெஸ்
பிரிண்டுகள்.



HT-6D 8599

உனது ஃபாஷனில் அக்கறையுள்ள

**பாம்பே டையிங்**

